Registered No. M. 2330.

"SIDDHANTHAM"
Vol. 11—No. 8.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

| மலர் கக | வெகுதான்ய ஆண்டு ஆவணித் திங்கள் 1938ஆம் ஆகஸ்டு | இதழ் அ |
|---|---|---|

உள்ளுறை | பக்கம்

| | |
|---|---|
| பரமனைப் பராவல் ... | ... ருருரு |
| செய்ந்நன்றி யறிதல் ... | ... ருருசு |
| ஞானாமிர்த மூலமும் விளக்கவுரையும் | ... ருஎ0 |
| தத்துவானுபோகக் கட்டளை ... | ... ருஎக |
| சமயங்களைக் குறித்த வியாசம் ... | ... ருஅ0 |

பத்திராசிரியர் : திரு. வி. உலகநாத முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்
"திருவருளகம்", 22-A, கல்லுக்காரத் தெரு, மயிலாப்பூர், சென்னை.

ஆண்டுச் சந்தா ரூபா 2. 1938 தனிப் பிரதி அணா 4.

சிவமயம்

# சமாஜத்தின் சைவத் தேர்வுகள்

இவை இவ்வாண்டில் 20-11-1938 ஞாயிற்றுக்கிழமை யன்று சென்னை, சிதம்பரம், தஞ்சை, மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, கோயன்புத்தூர், கொழும்பு, யாழ்ப்பாணம் முதலிய இடங்களில் நடைபெறும். இளஞ்சைவப்புலவர் தேர்வுக்கு 35 ஆண்டுக்குட்பட்ட எவரும் விண்ணப்பிக்கலாம். சைவப்புலவர் தேர்வுக்கு ஆண்டு வரையறையில்லை. இளஞ்சைவப் புலவர் பட்டம் பெறுமலே சைவப் புலவர் தேர்வுக்கு விண்ணப்பிக்கலாம் ; ஆனல் இளஞ்சைவப்புலவர் தேர்வில் தோல்வியுற்றவர் சைவப்புலவர் தேர்வுக்கு விண்ணப்பித்தலாகாது. ஆண்டு உறுதிச்சீட்டு (Age Certificate) சமாஜ அங்கத்தவர், பள்ளிக்கூடத் தமிழ்ப் பண்டிதர், கிராமமுன்சீபு ஆகிய ஒருவரிடம் பெற்று அனுப்பவேண்டும்.

தேர்வுக்குரிய பதிவுத் தொகை : இளஞ்சைவப்புலவர் தேர்வுக்கு ஒரு ரூபா, சைவப்புலவர் தேர்வுக்கு இரண்டு ரூபா ; விண்ணப்பமும் பதிவுத் தொகையும் காரியதரிசிக்கு 20-9-1938க்குள் கிடைக்க வேண்டும் தேர்வின் முடிபு 10-12-1938ல் "சித்தாந்தம்" பத்திரிகையில் வெளிவரும். பட்டங்களும் பரிசுகளும் கோயன்புத்தூரில் நடைபெற விருக்கும் சமாஜ ஆண்டு நிறைவிழாவில் வழங்கப்படும். ஏனைய விவரங்களையும் அச்சிட்ட விண்ணப்பத்தாளையும் காரியதரிசிக்கு எழுதிப் பெறுக.

**இவ்வாண்டின் தேர்வுக்குரிய பாடதிட்டங்கள். இளஞ்சைவப் புலவர் தேர்வு—முதல் வினுத்தாள் (சைவ இலக்கியம்)**—அகத்தியர் தேவாரத்திரட்டு முதற் பன்னிரண்டு பதிகங்கள் கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் உரையுடன ; திருவாசகம் நீத்தல் விண்ணப்பம் கா. சுப்பிரமணிய பிள்ளை உரையுடன் ; பெரிய புராணம்—காரைக் காலம்மையார் புராணம் பதவுரையுடன் ; பெரிய புராண வசனம் (ஆறுமுக நாவலர் பதிப்பு) முழுமையும் ; திருக்குறள் கடவுள் வாழ்த்து, அறன் வலியுறுத்தல், அன்புடைமை, அருளுடைமை, வாய்மை என்ற ஐந்து அதிகாரங்களும் பரிமேலழகர் உரையுடன் ;

Reg. M. 2330.

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானதரு வாணியைஉள் நாடு.



| மலர் ௧௧ | வெகுதான்யஆண்டு ஆவணித்திங்கள்<br>1938ஞு ஆகஸ்டுமீ | இதழ் ௮ |
|---|---|---|



## பரமனைப் பராவல்

[சிதம்பரம் - கே. வி. சிவசுப்ரமணியன், பி. ஏ.]

இயற்கை யன்னையின் எழில் மிகவிளங்கும் மாலை வேளை. குடம்பை நீத்துக் குஞ்சுகளுக்கிரைதேடச் சென்றிருந்த குருவியினங்கள் கூட்டை யடைந்து குஞ்சுகளோடு குலாவிக்கொண்டிருக்கும் நேரம். இளந்தென்றல் மலர்களின் நறுமணத்தை மாலையுலாப் போதருவாருக்கு விருந்தளிக்கும் மாலை நேரம். செங்கதிரோன் சென்றுமறைந்த பின்னேரத் திற்செல்லாம் வெண்கதிரோன் வான வீதியில் வனப்புறத் தோன்றினன்.

அச்சமயம், சீலம் சிறந்து விளங்குவதும், இரத்தினங்கள் பதித்த மாடங்கள் பொருந்தி உருவும் திருவும் மிக்க பூங்கொடிபோன்ற சாயலுடைய உமையம்மை தங்கியிருக்கும்

திருக்கோயிலையுடையதாயும் விளங்கும் திருவுத்தரகோசமங்கைப் பதியின் வீதிகளில் பெருத்த ஆரவாரம். உழுவையுரி போர்த்த உமாபங்கனது ஆலயத்தினின்றும் எழும் மணி யோசையைக் கேட்ட மக்கள் கோயிலை நோக்கிப் பரிந்துசெல்கின்றனர். ஆலயத்தின் நாற்பாலும் அணி அணியாய் ஏற்றி வைக்கப்பெற்ற திருவிளக்குகள் அம்பலத்தாடும் அலகில் சோதியனது திருவுருவத்திற்கு இன்னும் மிக்க சோதியை யளிக்கின்றன. இருபாலாரும் நிறைந்த மக்கட் கூட்டம் இடமின்றி நெருங்கிக் கூடியிருக்கும் காட்சியொருபக்கம். அகில், சந்தனம், மலர்மாலைகள், கற்பூரம் முதலிய பொருள்கள் நறுமணம் வீசி இன்பமூட்டும் விருந்து மற்றோர்பால். அக்கூட்டத்தினருள் தேவாரம் பாடுவார் சிலர்; திருவைந்தெழுத் தோதுவார் சிலர்; கருங்கல் மனமும் கரைந்துருக, நீர் வார் கண்ணராய், மெய்ம்மயிர் பொடிப்ப, விதிர் விதிர்ப்பெய்த கவி மாலை சூடுவார் பலர். அதே சமயம் இறைவர்க்கு நன்மூழ்க் காட்டி நறுமலர்சூட்டி ஆராதனை நடைபெறுகிறது. அனைவரும் இக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு கழிபேருவகையூப்ப, "செல்வமே! சிவபெருமானே! செம்பொருள் துணிவே! கருணைமாகடலே!" எனப் பற்பலவாறு வாய்விட்டரற்றி இன்பவாரிதியிற் றிளைத்து நிற்கின்றனர்.

அக் கூட்டத்திலோர்பால், மனமுருகப் பெருங்குரலிற் பாடும் ஒருவரது பாட்டோசை ஏனையோரது மனதைக் கொள்ளைகொண்டு அவர்பால் இழுத்துச் செல்கிறது. ஆ! அவர்கள் கண்ட காட்சிதானென்னே! முருகனினும் முருகு படைத்த இருபது வயதென மதிக்கத்தக்க கட்டிளங் குரிசில். தூய மனதோடுகூடிய துறவுக் கோலம். உடலெல்லாம் சிவகண்மணிகள் (உருத்திராக்கம்) விளங்குகின்றன. மாயவனும் மலரவனும் காணமுடியாத மறையவனை அச்

ளடியார் பரவிப்பரவி உள்ளம் நெக்குருகும் திறத்தினைக் கவனிப்போம் :—

" உத்தரகோசமங்கைக் கரசே! விடையூரும் வித்தகனே! இனி வெம்பவக் கடலுக்கு ஆற்றேனாகலின் என், பவக்கடல் தொலைத்து ஆட்கொள்வாயாக. பவளவாய்ப் பெண்டிரது பாதமே சதமென நம்பித்திரியும் என்னைப் பாசத்தினின்றும் நீக்குவாயாக. வஞ்சனேன் உன்னை நீங்கிற்பவும், வலியவந்து கண்பார்த்து ஆட்கொள்ளும் நினக்கு யான் எங்ஙனங் கைம்மாறியற்ற வல்லேன்! ஒளிர்கின்ற நீள்முடி உத்தரகோசமங்கை மன்னனே! உனது அருட்கரத்தால் என்னை நீ வளைத்துப் பிடிக்கவும், 'அப்பிடியில் நீங்கி இவ்வுலகப் பற்றிலே விருத்தியடைகின்ற என்னைத் தடுத்தருள்க. வளர்கின்ற தீயில் வீழுந்து மடியும் விட்டிற் பறவைபோல மழலைச் சொல்லுடைய மங்கையர்பால் பலநாளும் விருப்பம் வைக்கின்ற என்னை, அத்துன்பத்தினின்றும் நீக்கியருளாயோ? அற்ப நாய்போன்றவரது பொய்ச் செயல்களைப் பெருந்தகையோர் மன்னிப்பரல்லவா? அடியேன் நினது திருவருட்டிறத்தினை அறியாமையால் இதுகாறும் வெறுத்தேன். அதற்காக நீ என்னை வெறுத்தொதுக்கித் தள்ளுவையோ? என் வினையனைத்தையும் கடிந்தொதுக்கியாண்டு கொள்க. கிண்கிணிமாலை யணிந்த காளையூரும் உத்தரகோசமங்கைக்கரசே! ஐம்புலன்களின் ஆசை ஒரு பக்கமும், அதன்பாற் கொண்டுள்ள பயம் மற்றொரு பக்கமுமாக என்னை இழுக்க யான் அல்லலுறுகின்றேன். உனது சிறந்த திருவருள் என் பிழையை எப்பொழுது தீர்த்து ஆட்கொள்ளுமோ என்று கவலையுற்று உள்ளம் புழுங்குகின்ற என்னைக் கைவிட்டிடாதே. மூவுலகுக்கொருதலைவ! இருதலைக் கோள்ளியின் உள்ளெறும்போத்து நினைப்பிரிந்த விரிதலையேனை விடுதி கண்டாய்? வண்டுகள் பழகித் தேர்ந்து விளரிபாடும்

அழகிய சோலையுடைய உத்தரகோசமங்கைத்தலைவ! முப்புறத்தைப் பகைத்து வலிமை பொருந்திய திண்மையுடைய வில்லாகிய மேருவினை வளைத்து எரித்தொழித்தாய். நரியைப் பரியாக்கி மதுரைப்பெருநன் மாநகரிருந்து குதிரைச்சேவகன் [illegible]ய [illegible] ஆங்கது தன்னில் அடியவட்காகப் பாக்காய் மண் சுமந்தருளினை. வேடுவனாகி வேண்டுருக்கொண்டு காடது தன்னிற் கரந்த நினக்கு வீடது தன்னை வேட்டு நிற்கும் என்னை ஆட்கொண்டருளுவதும் அரியதோர் செயலோ? எனது மிகுந்த விடாயைத் தீர்க்கும் அமுதப் பெருங்கடலே! ஐம்புலனும் என்னைப் பகைத்து வஞ்சனை செய்ய அடியேன் உனது திருவடித்தாமரையை நீங்கினேனைக் கைவிட்டிடாதே. அடியார்க்கெளிவரும் அன்ப! கடல் நீரை நாயானது சிறிது சிறிதாக நக்கிக் குடித்தல்போல உனது கருணைக்கடலினுள்ளே உள்ளத்தைச் செலுத்தி நன்கு பருக இயலாத என்னைக் கைவிட்டிடாதே. நீயே எனக்குத் தாய் போல்வாய்; தந்தையொப்பாய். என்னை நோக்கி 'அப்பா! பயப்படாதே' என்று சொல்லுவாரில்லாமல் வருந்தி அலையும் என்னைக் கைவிட்டிடாதே. பிறவிப் பிணிப்பட்டு மடங்கினோர்க்கு மருந்தினனே! அடியேனை ஆட்கொள்ளவேண்டியது உன்றன் கடமை. எனது உடல், பொருள், ஆவி மூன்றையும் உன்பாலொப்புவித்து விட்டேன். அவற்றை நீ யாது செய்யினும் வினவுதற்கு எனக்கு உரிமையில்லை. ஆகையால் அவற்றை விற்றுக்கொள்ளுக அல்லது ஒற்றிவைப்பாய் (ஒருவரிடத்து வைத்துப் பொருள் வாங்கி சில காலங் கழித்து மீட்பித்தல்) என்று சொல்வதைத் தவிர வேறொன்றும் அறியாத என்னை நீக்கிவிடாதே. கயாசுரனைக்கொன்று தோலுரித்துப் போர்த்து வஞ்சிக்கொடி போன்ற உமாதேவியை அஞ்சுவித்தனை, எனது வல்வினைக்காட்டை முற்றிலும் அழிக்க நினது அருட்பெருந்தீயினை எனக்குத் தக்

தருள்வாயாக. விண்ணவரும் நண்ணற்கரிய உம்பருள்ளாய்! படர்தற்குக் கொழுகொம்பில்லாத கொடிபோலத் திரிந்து சுழன்றேன்; வீடடைதற்குத் தவிக்கின்ற என்னை விட்டு விடாதே. ஆனைச்சண்டையிலகப்பட்ட சிறு செடிபோல் ஐம்புல ஆசைப்போரில் அகப்பட்டு வாட்டமுறும் என்னை ஆண்டு கொள்க. எனது வாழ்க்கைக்குக் காரணமான முதற் பொருளே! அடியேனுக்குக் கிடைத்த இவ்வுடம்பைக் கொண்டு தவறுகளையே இழைத்து வந்தேன். ஆகையால் பயனற்ற அடியேனைக் கைவிட்டு விடாதே. நீ கை நழுவவிட்டால் என்னைத் தாங்குகிறவர்கள் வேறில்லை. அதனாற் கெட்டொழிவேன். நெய்க்குடத்தை எறும்புக் கூட்டம் மொய்ப்பதுபோல, ஐம்புலன்களும் என்னை உன்பாற் செல்லவொட்டாமல் தடுக்கும்பொருட்டுச் சூழ்கின்றன. அதனால் மெய்ந்நெறி விடுத்துப் பொய்ந்நெறியிற் கிடந்துழல்வேனாயினேன். தீயனாகிய என்னைக் கைவிட்டிடாதே. எறும்புகளிடையகப்பட்ட நாகப்பூச்சிபோல ஐம்புலன்களால் அரித்துத் தின்னப்பட்டுத் துன்புறும் தமியேனையாட்கொள்வாய். குறைந்த நீரில் சிறு மீனானது வாடிக்கிடத்தற்போல உன்னைப் பிரிந்தமையால் அச்சமுற்றுவாடித் தயங்குகிறேன். மனதைக்கொள்ளை கொள்ளும் மாதரது மறையுறுப்புகளிலே மனதைச்செலுத்தி மயங்கினேன். அருட்கடலே! மத்திடையகப்பட்டுச் சுழல்கின்ற தயிர்போல ஐம்புலமத்திடை யகப்பட்டு அல்லலுறுகிறேன். வாழைக்கனியைப் பழுக்க வைப்பதுபோல நீ என்னை உருக்கமுடையவனாய்ச் செய்து காட்சியளிப்பதெக்காலம்? மந்தாரையை மலரச்செய்ய வல்லோசையும், பொழியும் தேனைப்பருகுவதற்கு மெல்லோசையுமாகி இருவகை யோசையைச் செய்யும் வண்டுகள் நிறைந்த பூம்பொழி லுத்தரகோச மங்கைக்கரசே! மரச்செறிவிற் பொருந்திய நெருப்புப்போல ஐம்புலனாகிய தீ என்னைப்பற்றி

எரிக்கின்றதை நீ அறியாயோ? மலைகள் ஒன்று சேர்ந்து தாக்
கின்றாற்போல தீவினைப்பயன்கள் என்னைவந்து தாக்குகின்றன.
அறிவிலியாகிய எனது குற்றத்தைப் பொறுத்து "அஞ்
சாதே" என்று நீ அருள் செய்தாலன்றி யான் உய்யும் வகை
யறியேன். எனக்கு எய்ப்பில் வைப்பான அப்பனே!
உடம்பை நீக்கி உன்னையடையும் உபாயத்தை உரைத்தரு
ளாயோ? வலையிடைப்பட்ட மான்போன்ற மருட்சிப்பார்வை
யுடைய பெண்டிர் கண் வலையிற்சிக்கி அவர் வழியை மேற்
கொண்டலைந்த அடியேனை மன்னித்துக் காத்தருள்வதுன்
கடன். இமையமலை தந்த உமையம்மை கணவ! ஆசையாகிய
வெப்பமுடைய நீர் நிலையில், செவ்விதழ் மாதராகிய முதலை
கள் கடிக்கும்படி முழுகித்துன்பப்படுவேனைக் கைவிட்
டிடாதே. முதல்வனே! உனது மலர்த்தாளை மண்ணியிருக்க
வணங்கிச்செல்லும் தொண்டரோடு என்னையும் சேர்த்துவிடு.
அதுபற்றியே உன்னை யான் பாடுகின்றேன். மானனைய நோக்
குடைய மாதர்கூட்டத்தை நாடிப் பலாப்பழத்திலே மொய்க்
கும் ஈயைப்போல ஆசைப்படுவேனைக் கைவிட்டிடாதே. நீ
கைவிடிலோ, உன்னை விடத்தையுண்ட பித்தன், காரனைய
கருங்கழுத்தன், குணமிலி, தேய்மதியன், பண்டைப்பெரிய
ஆண்டி என்று அடிக்கடி உன் இகழ்ச்சியைப் பலரிடத்தும்
எடுத்துரைப்பேன். மாணிக்கமே! நின்புகழை எஞ்ஞான்
றும்பாட அறியேன்; நின்னை வணங்கேன், வாடிச்செய
லற்று உள்ளங்கசிந்து அன்புசெய்யேன். கொன்னே வருந்தி
னேன். என்னை நீ ஆட்கொள்ளாது விடின், "நீ யாருடைய
அடிமை" என்றென்னைக் கேட்பார்க்கு "யான் உத்தரகோச
மங்கையிலுள்ள உமாபங்கனது அடியார்க்கடிமை" என
விடைகூறி அவர்கள் உன்னைச் சிரிக்கும்படிச் செய்வேன். மற்
றும் உன்னை 'கரித்தோல் போர்த்த பெரும்பித்தன்' 'புலித்
தோலாடையணிந்த பித்தன்' 'விடமுண்ட பித்தன்' 'சுடு

காடுறையும் பித்தன்' 'தழலில் நிற்கும் பித்தன்' எனப்பல வாறாகக்கூறி அலர் தூற்றுவேன். ஆகையால், யான் உன்னை வைதாலும் வாழ்த்தினாலும் எனது தவறுக்கே மனம்வாடித் துக்கப்படுவேனைக் கைவிட்டிடாதே."

இக்கட்டுரைக்கு ஆதாரமாய்த் திகழ்வது மணிவாசகப் பெருந்தகையாரது "நீத்தல் விண்ணப்பம்" என்ற பதிகமாகும்.

# செய்ந்நன்றி யறிதல்

[ஜி. சுந்தரமய்யர்]

இவ்வதிகாரத்திலுள்ள ஞாலத்திற் பெரிது, கடலிற் பெரிது என்று முடியும் குறள்களும், அடக்கமுடைமை அதிகாரத்திய மலையினும் பெரிது என்று முடியும் குறளும் ஆகிய இந்த மூன்று குறள்களும் பெரியபுராணம் பாடிய சேக்கிழார் நாயனாருக்குச் சோழன் ராஜ்ஜியத்தில் மந்திரி வேலையைக் கிடைக்கச் செய்தன என்கிற சரித்திரத்தை நேயர்கள் அறிவார்கள்.

வள்ளுவனார் இவ்வதிகாரத்துக்கு வைத்திருக்கும் பெயரே இவ்வதிகாரத்திலுள்ள குறள்களை எவ்வரிசையில் வைப்பது நேர்மை என்பதை ஒருவகையிற் காட்டுவதுபோல் தோற்றுகிறது. 'செய்' என்று ஆரம்பிப்பதால் நன்றியை யாருக்கு எத்தருணத்தில் எப்படிச் செய்யவேண்டும் என்று மொழியும் குறள்களை முதலிலும், 'நன்றி' என்று நடுவிலிருப்பதால் உதவி புரிந்ததாலேற்பட்ட நட்பின் சிறப்பைக் கூறும் குறள்களை நடுவிலும், 'அறிதல்' என்று ஈற்றிலிருப்பதால் நன்றிமறத்தல் குற்றமெனவும் நிச்சயிக்கும் குறள்களைக் கடைசியிலும்வைப்பது சிறப்பென எனக்குத் தோன்

றுகிறது. இம்முறையைத்தான் பருதியார் மனத்திற்கொண்டாரென நான் நினைக்கிறேன்.

நன்றி என்பதை நடுநாயகமாக அதிகாரப் பெயரிட்டிருப்பது நன்றிசெய், நன்றி மறவாதே என்பவைகளை யாவர்க்கும் நினைவு மூட்டும். நன்றி செய்தல் அன்புடைமை, விருந்தோம்பல், வாய்மையுடைமை போன்ற அறமாகும். நன்றி மறத்தல் கொடிய பாபமாகும். பிராயச்சித்தத்தா லீடேறுதலில்லாத குற்றமெனப் பெரியோர்கள் கருதுகின்றனர். ஆகவே, செய்ந்நன்றியறிதல் சிறந்த குணமாதலால் வாய்மையுடைமைக்குப் பின் வைக்கப்பட்டது. செய்ந்நன்றி மறந்தவனைச் சத்தியவந்தனெனக் கருதவோ சொல்லவோ முடியாது.

இதற்குப் பருதியார் தனக்குப் பிறர் பயன்கருதாது காலத்தில் செய்த நன்மை எத்துணைத்தாயினும் அதனை மறவாமை என்ற பொருள் கொண்டிருக்கிறார். அதிகாரப் பெயரை நன்கு விளக்கியிருப்பதோடு குறள்களிற் கண்டவைகளுக்கு ஒரு சாராம்சச் சருக்கமாகுந் தன்மையிலும் வைத்துப் பொருள் கூறியிருக்கிறார்

ஒவ்வொரு மனிதனும் தன் தேகத்தையும், உயிரையும் பேணுகின்றான் என்பது தெளிவு. தன் தேகத்திற்கோ உயிருக்கோ ஆபத்து வந்தால் தன் கைகளாலும் மற்ற சாதனங்களாலும் மீட்டுக்கொள்ள முயற்சிக்கிறான். பிற உயிர்களையும் தன்னைப்போல் பாவித்து நன்றி செய்யவேண்டும். உபகாரம் வீண்போகாது என்று நமது நாட்டில் வழங்கிவரும் நீதிவாக்கியமும் உதவிபுரிதலைச் சிறந்த அறமாக மதிப்பதை உணர்த்தும். நன்மை செய்தலைக் காட்டிலும் ஒருவன் செய்த நன்மையை மறவாதிருத்தலே மிகச் சிறப்புடையதாகலின் அதிகாரத்துக்குச் செய்ந்நன்றியறிதல் என்ற பெயரைச் சூடியிருக்கவேண்டும்.

பரிமேலழகர் பாட வரிசையை 3,5,4,6,8,1,7,2,9,10 என்று மாற்றிக்கொண்டால் மணக்குடியார் பாட வரிசையாகும். 1,2,3,5,4,6,7,9,8,10 என்று மாற்றிக் கொண்டால் பருதியார் பாடமாகும். இக்கட்டுரை பருதியார் உரையைத் தழுவி எழுதப்பட்டிருக்கிறது. பருதியார் பாடம் பின் வருமாறு :

1 செய்யாமைச் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

[தாயத்தார் பாடமுமிதுவே.]

2 காலத்தி னாற்செய்த நன்றி
ஞாலத்தின் மாணப் பெரிது.

3 பயன்றூக்கா செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

[தாமத்தார் பாடமுமிதுவே.]

4 உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

5 தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

6 மறவற்க மாசறுத்தார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயர் நட்பு.

[வி. ஓ. சி. இந்தப் பாடத்தைக் கொண்டிருக்கிறார்.]

7 எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கள்
விழுமம் துடைத்தவர் நட்பு.

[எழுமவ் வெழு பிறப்பும் என்பது தாமத்தார் பாடம் - தங்கள் வி. ஓ. சி. பாடம்]

8 கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

[தருமர் தாமத்தர் - அவர் செய்ததொன்று நன்
றுள்ளப்படும்.]

9 நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று.

10 எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு.

## 1. உத்தம நன்றி

யாவர்க்கும் நன்மை செய்யவேண்டியதே. மனித வாழ்க்கையில் நன்மை செய்யவேண்டியது கடமையாகும். இல் வாழ்க்கை என்பது உலகத்திலுள்ள மற்றெல்லாப் பிராணிகளிடத்திலும் அன்பு பூண்டு பத்துக் கடமைகளையும் சரிவரச் செய்வதற்கே ஏற்பட்டதென்று முன்பு சொல்லப் பட்டது. இக்குறளில் எளியவருக்குச் செய்யுமுதவியின் திறத்தைக் கூறப்பட்டது. ஒருவன் மற்றொருவனுக்கு உதவி செய்தால் உதவி பெற்றவன் உதவி செய்தவனுக்கு ஏதாவது ஒரு சமயத்தில் கைம்மாறு செய்யக்கூடும். செய்யக்கூடா தென்பதில்லை. ஆனால் மிகவும் எளியவருக்குச் செய்யும் உதவிதான் தலை சிறந்தது. திருப்பமுடியாத வறியவருக்குச் செய்த உதவிக்குப் பலன், தரும சாத்திரங்களில் முத்திப் பிராப்தி என்று சொல்லி யிருப்பதால் செய்யாமைச் செய்த உதவி என்ற பாடமே சிறந்ததெனத் தோற்றுகிறது. இவ்வுலகத்திற்கும் சுவர்க் கத்திற்கும் நிறையில் மிக்கது யாதென வினவில் முத்தி வீட்டைத்தான் சொல்லவேண்டும். அத்தகைய மாண்பு செய்யாமற் செய்த உதவிக்குச் சொல்வதற்கில்லை. எவ்

ங்குட பெற்றவன் கைம்மாறு செய்ய முடி யும். ஆகவே மறித்து உதவமாட்டாமையுள்ள விடத் துச் செய்த உதவிக்கு மண்ணுலகத்தையும் விண்ணுலகத் தையும் கைம்மாறாக ஒரு சேர ஆளும்படி கொடுத்தாலும் அது நிகராதலில்லை. இக்காலத்தில் ஏழைகள் படுந்திண்டாட் டம் மிகவும் பரிதாபமாயிருக்கிறது. நமது சாத்திரங்களில் ஏழைகளுக்கு உதவி செய்வதே கடவுளின் முக்கிய நோக்க மென்று பல இடங்களிலும் கூறியிருப்பது இதற்குச் சான் றாகும். கடவுள் தன்மைக்கு நிகரான இவ்வுதவியே சிறப் பானதென்று சொல்லாமலே விளங்கும். ஏழைகளை ஏள னம் செய்யும் உலகவியல்பைக்கண்டு பரிதாபப்படவேண்டி யதே.

## 2. காலத்தினாற் செய்த நன்றியின் சிறப்பு

ஞாலத்தின் மாணப் பெரிதென்றார் வள்ளுவனார். எந்த விதத்தில் என்ற வினாவுக்குப் பருதியைத் தவிர வேறு உரை யாசிரியர்கள் விளக்கஞ் செய்திருப்பதாகத் தோன்றவில்லை. உரைகளை வாசித்தால் பரிமாணத்தால் சிறிது பெரிது என்று கருத்துத் தோன்றுகிறதே யொழிய வேறு எந்த விதமான சிறந்த கருத்தை வள்ளுவனார் உன்னியிருப்பார் என்று சொல்லமுடியவில்லை. அடுத்த குறளின் உரைகளும் அவ் வகையில்தானிருக்கின்றன. வி.ஓ.சியின் உரை சிறிது விளக் கந் தருகிறது. செயலால் சிறிதாயினும் பயனால் மிகப் பெரிதென்றார். பருதியார் உரையை வாசிப்பவர்கள் வள்ளுவ னார் கருத்தையறிய அவர் நன்றாக முயன்றிருக்கிறார் என்ற பெருவகையை அடைவார்கள்.

ஒருவனுக்கு உதவி வேண்டுங் காலத்தில் ஒருவன் செய்த நன்மை பயக்கும் உதவி அளவில் சரியாயினும்,

நிலம் செய்யும் உதவியைக் காட்டிலும் மிகப் பெருமையுடையது.

நிலம் பலவிதத்தில் மனிதனுக்கு உதவி புரிகின்றது. நிலத்தில் விளையும் பயிர்களைக் கொண்டும் பலன்களைக் கொண்டும் நிலத்திலுற் கிடைக்கக் கூடிய பொருள்களைக் கொண்டும் உலகம் வாழ்வது யாவரும் அறிந்ததே. பருவத்திலிட்ட வித்துப் பயனைப் பன்மடங்களிக்கும். இருந்தாலும் நிலம்

தைச் செம்மையாய் உழுவேண்டும். எருப் போடவேண்டும். பருவத்தில் வித்திடல் வேண்டும். தண்ணீர் தக்க சமயங்களில் பாய்ச்சவேண்டும். வேண்டிய உழைப்பிருந்தாலும் சில சமயங்களில் எதிர்பார்த்த பலனும் கிடைப்பதில்லை. உதவி பெற்றவன் யாதொரு சிரமமுமின்றிக் காலத்தில் உதவி பெறுவதினலும் அதனல் அவன் சுகம் பெறுவதினலும் அத்தகைய உதவி மாணப் பெரிதென்றார்.

## 3. பயன்றூக்காச் செய்த உதவி

தாமத்தார் தூக்கா என்பதற்குத் தூக்கி எனக்கொண்டு இதத்தைத் தூக்கி அதாவது ஆராய்ந்து நன்மை செய்தல் என்று பொருள் கொண்டிருக்கிறார். பரிமேலழகர் இவர்க்கிது செய்தால் இன்னது பயக்கும் என்று ஆராய்தல் இலராய்ச் செய்த உதவி என்று பொருள் கொண்டிருக்கிறார். ஆராயாமல் கண்ணை மூடிக்கொண்டு அல்லது அந்த அவசரத்தில் என்ன தோன்றுகிறதோ அதைச் செய்து விடலாமெனப் பொருள் கூறியிருக்கிறார். உதவி செய்பவனுக்கு யாது பயன் வரும் என்று ஆராயாதவனய் என்று வி. ஒ. சி. பொருள் கொண்டிருக்கிறார். தன்னை ஆபத்தில் சிக்கவைத்துக்கொண்டு மற்றவனுக்கு உதவி செய்யத் தான் வேண்டுமா என்ற ஒரு வின கிளம்புகிறது. அப்படிச்

செய்வது மதியீனம் என்றும் பலர் சொல்லுவார்கள். மணக்குடவர் உரையும் தெளிவாயில்லை. எந்த விதத்தில் கடலிற் பெரிது என்று பருதியைத் தவிர வேறு உரையாசிரியர்கள் தெளிவுபடுத்தவில்லை.

கைம்மாறு கருதாதுசெய்த உதவியினுடைய நன்மையை ஆராய்ந்து பார்க்கின் அந்த நன்மை உலகத்தாருக்குக் கடலாற் செய்யப்படும் நன்மையைவிடப் பெருமை வாய்ந்தது. கடல் நீர்தான் எழிலியாய் மாறி உலகத்திற்கு மழையாயுதவி செய்கிறது. கைம்மாறும் எதிர்பார்ப்பதில்லை. ஆனால் கடல் மழையை எதிர்பார்த்துள்ளது. வான் சிறப்பு அதிகாரத்திய ஏழாவது குறள் "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி, தானல்கா தாகி விடின்" இதற்குச் சான்றும். ஆகவே பயன்றூக்காது செய்த உதவி கடலினும் பெரிதாம். பயன்றூக்கிச் செய்த உதவிக்கு இராமாயணத்தில் சீதைக்கு அசோகவனத்தில் அவள் தன்னைத் தற்கொலை செய்ய எத்தனித்த சமயத்திலும், இராமர் சோகமுற்றுச் சீதையை நினைத்து மிகவும் வருந்திக்கொண்டிருந்த சமயத்திலும், இலட்சுமணன் போர்க்களத்தில் சக்தி ஆயுதத்தால் அடிபட்டு மூர்ச்சித்து விழுந்த சமயத்திலும், பரதன் எரியைச் சுற்றி அதில் விழப்போகும் தருவாயிலும் அவர் அவர்களுக்கேற்றபடி அனுமான் கைம்மாறு கருதாமலும் பயன் இன்னது விளையும் என்று தெரிந்தும் இதத்தைச் செய்த உதவிகளை இக்குறளுக்குத் தாமத்தார் கொண்ட பாடத்திற்கு உதாரணமாகச் சொல்லலாம். இக்காலங்களிலெல்லாம் அனுமான் நன்றாக ஆராய்ந்து யாது செய்தால் என்ன நன்மை விளையும் என்று யோசித்துச் செய்ததாகத்தான் காவியங்கள் கூறுகின்றன. ஆகவே இம்மூன்று குறள்களினாலும் செய்யா

மற் செய்த உதவி மிகவும் சிறந்த தென்றும், உதவியைப் பயன் தூக்காது காலத்தில் செய்யவேண்டுமென்றும் போதிக்கப்பட்டன.

## 4. மேற்கூறிய உதவியின் அளவு அல்லது பயன்

பருதியைத் தவிர ஏனைய உரையாசிரியர்கள் இக்குறளுக்கு உதவி பெற்றவன் மாற்றுதவியினளவைப் பேசுவதாக அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். நன்றி செய்தல் அறமாகும். கைம்மாறு கருதாமற் செய்யவேண்டும் என்று குறள் போதிக்குமானால் மாற்றுதவியினளவைக் கொண்டு போதிக்க வேண்டியது பொருத்தமாயிருக்குமா என்று கவனிக்க வேண்டியிருக்கிறது. உதவிக்குதவி செய்தல் முடியாதாயின் அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமில்லை. உதவிக்குதவி செய்ய முடியுமாயின் செய்யாமல் செய்த உதவி பயன் தூக்காச் செய்த உதவியின் சிறப்பைப் புகழ்ந்தது வெறுங் கவித்திறம் என்று கொள்ளல் நேரும். ஆகவே மேற்கண்ட உதவியின் சிறப்பை வேறொரு வகையில் போதித்திருப்பதாகக் கொள்வதே சிறப்பெனத் தோற்றுகிறது. பருதியாருரை அவ்வகையில் அமைந்திருக்கிறது. ஒருவனுக்குப் பயன் தூக்காது காலத்தினால் செய்யாமைச் செய்த உதவியானது தன்னளவினையே தனக்கு அளவாகக்

-தவியைப் பெற்றுக் கொண்டவரது

கொண்டதாகும். பசித்து

வந்தவனுக்கு அன்னமிட்டால் அவனதை மகிழ்ச்சியோடுண்டுவிட்டு 'என் கும்பி குளிர்ந்தது போல உங்கள் குடும்பம் வாழட்டும்' என்று கூறுவது போன்ற வாழ்த்துக்கள் மிகுந்த பலனை யளிக்கும். இராமாயணத்தில் இராமனுக்கு அனுமான்

செய்த உதவியை நினைந்துருகிக் கைம்மாறு எவ்விதத்தில் செய்வதென்று நினைத்து இராமபிரான் அன்போடு தாசனை ஆலிங்கனம் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் வித்து ஒன்றே ஆனாலும் நிலத்தினியல்பால் பயன் மாறுபடும். வளமானவிடத்திலிட்ட வித்து நல்ல பலனைக்கொடுக்கும். பயன் தெரிவாருக்குச் செய்த சிறிய உதவி தன்னளவில் நில்லாது பெரிதாக வளர்ந்து சிறந்த பலனைக் கொடுக்கும். தென்னைமரம் இளநீர் கொடுப்பதும் உவர்க்கடல் எழிலாகமாறி மழைசுவதும் இக்குறளுக்கு நல்ல உதாரணமாகும். இழிந்த மாந்தர் கைப்பொருள் நல்ல யோகிகள் கைப்புகின் பலனளவு மாறுகின்றதல்லவா? ஆகவே உதவியின் பயன் தன்னளவிலேடு நில்லாமல் பெற்றுக்கொண்ட மனிதர்கள் தன்மை வித்தியாசம்போலாகுமென்று வரையறுக்கப்பட்டது.

## 5. நன்றியறிதல் அல்லது மதித்தல்

நனி சிறிய நன்மையைக் காலத்தினுல் பயன் கருதாது செய்யாமை செய்வானுபின் - (அதனை அவ்வளவிற்றென்று கருதாது -) உதவியின் பயனை அறியக்கூடியவர்கள்—சான்றோர்கள் அதனை மிகவும் பெரிதாக மதித்து ஏற்றுக்கொள்வர். அதனாலே பயனையும் அவ்வாறு பெறுவர். இக்குறளுக்குத் திருஷ்டாந்தம் பாரதத்தில் துரோணருடைய உருவை அமைத்துக் குருவாய்க் கொண்டு வில்வித்தை கற்று விஜயனையும் வெற்றி கொள்ளுமாற்றல் பெற்ற ஏகலவன் குருகாணிக்கையாய்க் கட்டைவிரலைக்கொடுத்ததேயாகும். ஏகலவன் சான்றாண்மை மிகவும் வியக்கத்தக்கதே. பயன் தெரிவார் கோள்வர் என்னும் சொற்றொடரிலுள்ள உட்கருத்தை முற்றிலுமறிய இச்சான்றை மனதில் வைப்பது நன்று.

## 6. நன்றி மறவாமை

மறவற்க மாசற்றார் கேண்மை என்ற பாடம்சிறப்பல்ல. வி. ஒ. சி. உரையில் இப்பாடத்தைக் கண்டிக்கிறார். 80-வது அதிகாரம் 10-வது குறளில்-நட்பாராய்தல்-" மருவுக மாசற்றார் கேண்மை" என்கிற வாக்கைக் கவனிக்க. அவ்வதிகாரத்துக்கு அவ்வார்த்தைகள் பொருந்தும். இவ்வதிகாரத்துக்கு யாதொரு பொருத்தமுமில்லாத குற்றத்தோடு கூறியது கூறவேண்டும் குற்றமும் வாய்க்கும். துன்பத்தில் துணை செய்தோன் உதவி மாசறுத்தோனுதவி போன்றது என்று ஒன்றுக்கொன்று தக்க சான்றாயிருப்பதை உன்னிப் பார்க்க.

பரிமேலழகர் இம்மைக்குறுதி கூறுவார் மறுமைக்குறுதியையும் உடன் கூறினார் என்று விரிந்த உரை செய்திருக்கிறார். பரிமேலழகர் பெரியவர்தான். இவ்வுரை வெறுஞ்சொற்களஞ்சியமா யிருப்பது தவிர விசேடக்கருத்திருப்பதாகத் தோற்றவில்லை. மாசற்றார் கேண்மை பாராட்டத்தக்கதே. சத்சங்கம் கதிக்கு வழிகாட்டி மறுமைப் பயனுமுதவும். சந்தேகமில்லை. யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கதே. நன்றி மறவாமை என்னும் அதிகாரத்தில் இச்சொற்களுக்கு யாது பொருத்தமெனத் தெளிவைக் காணோம்.

அறன் வலியுறுத்தல் எனும் அதிகாரத்தில் "மனத்துக்கண் மாசிலனாத லனைத்தற னாகுல நீரபிற" என்னும் குறளில் அறத்திற் சிறந்தது யாதென நிச்சயிக்கப்பட்டது. துன்பத்துட்டுப்பாயார் நட்பு மாசறுத்தார் கேண்மை போன்றது என்று நிர்ணயிக்கவே வள்ளுவனார் உத்தேசித்திருப்பார். என்று கொள்ளுவதுதான் இவ்விடத்துக்குப் பொருந்தும். நன்றி மறவாதே என்பதை உறுதிப்படுத்த தக்க உபமானத்

தைப் பாங்காய் வைத்திருக்கிறார் என்று சொல்வதே சரி யெனத் தோற்றுகிறது.

தன்கண்ணுள்ள அகக் குற்றங்களையும் புறக்குற்றங்களையும் அன்பு வாய்மையாலே ஒழிக்கச் செய்து தன்னைப் புனிதமாக்குகிறவர்களுடைய நட்பை மறவாதிருக்கக் கடவன்; தனக்குத் துன்பமெய்திய காலத்தில் துணையாயினருடைய கேண்மையை ஒருவன் விடாது கைப்பற்றக் கடவன்.

அன்பு புறக் குற்றங்களை யொழிக்க வல்லது. "மறத்திற்கு மஃதே துணை" என்ற குறளைக் கவனிக்க. மனக் குற்றங்களைக் கடிய வாய்மை சாதகமாகும். "அகத்தூய்மை வாய்மையாற்காணப்படும்" என்ற குறளைக் கவனிக்க. ஆகவே அத்தகையா ருதவிக்கு நன்றி பாராட்டவேண்டும். துன்பத்திற்கு யாரே துணையாவார் என்று 130-வது அதிகாரத்தில் நெஞ்சிற்கு எச்சரிப்பதாலும்,

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு."

என்று 79-வது அதிகாரத்தில் நட்பின் இலக்கணத்தை யறுப்பதாலும் துன்பத்தில் துணையா யிருந்தவன் மேன்மையை நன்றாய் விளக்கவே அதற்குத் தகுந்த சான்றை மாசறுத்தார் கேண்மையென்று பாடம் கொள்வதே சிறந்ததாகும்.

துப்பு என்னும் சொல்லுக்குச் சுமார் 24 பொருள்களிருப்பினும் இவ்விடத்திற்குத் துணை என்று பொருளமைப்பதே குறளுக்கொத்ததா யிருப்பதையும் கவனிக்க.

7. தருமர், நச்சர், பருதி, மணக்குடியார், பரிமேலழகர் எல்லோரும் ஒரே பாடத்தைக் கொண்டிருக்கிறார்கள். "எழுமவ்வெழு பிறப்பும்" என்பது தாமத்தர் பாடம். தங்கள் என்பது வி. ஓ. சி. பாடம். குறளுக்கு உரை செய்திருக்கும்

இராமாநுஜகவிராயர் மிகவும் விந்தையான அன்வயம் செய்தி ருக்கிறார். "தங்கள் விழுமம்" என்பதை தம், கண், விழும், அம் என்று பொருளுரைத்திருக்கிறார். இது ஒரு வகையில் படிப்பவர்களுக்கு உவகை யூட்டலாம். என்ற வேற்றுமை யுருபையும் அம் என்ற ஓரே சொல்லை இரண்டு சொற்களாய்ப் பிரிப்பதையும் யாது மேற்கோள் கொண்டு செய்தார் என்று புரியவில்லை. இவ்வன்வயத்திற்கு வியந்து எங்கள் ஆசான் சிதம்பரனார் ஒரு திருஷ்டாந்தம் கொடுத்தார். நோன்பென்பது கொன்று தின்னாமை. பொருள் வெளிப்படை. தின்னாமை என்பதைத் தின் ஆமை எனப்பிரித்து ஆமையைத் தின்பது நோன்பு என்று ஒருவர் பொருளுரைத்தால் நகையை உண்டாக்குமல் லவா? அது போலத்தானிருக்கிறது. கவிராயர் அன்வயம் பொருள் சிதைவு இல்லையேனும் குறளில் மேற்படியார் அன் வயத்திற்கு மேற்கோளைக் காணோம். "புன்கணீர் பூசல் தரும்" என்று குறள் பேசுகிறதேயொழிய 'அம்' என்கிற சொல்லை நீர் என்ற பொருளில் குறளில் வழங்கியிருப்பதை நான் அறியேன். வாத்தியார் என்னும் சொல்லை ஆங்கிலத் தில் சொல்ல நினைந்த ஒருவன் come fire who என்று மொழி பெயர்த்தால் எத்தன்மையாயிருக்கும்?

இவ்வதிகாரத்தில் 6 முதல் பாக்கிக் குறள்களெல் லாம் நன்றிமறப்பது கொடும்பாவமென்று மனிதன் அறிய வேண்டுமென்பதை வற்புறுத்துகிறது. நன்றி மறப்பது உலகவியல்பா யிருப்பதை வள்ளுவனார் கண்டார்போலும். 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்ற பழமொழியும் நன்றி மறவாதிருத்தலை ஞாபகமூட்டுகிறது. நன்றி மற வாமை சிறந்த அறமாதலால் பலவிதத்தில் மனிதனுக் கறி வூட்ட உத்தேசித்து ஐந்து குறள்களை விதிகளாயமைத் திருக்கவேண்டும். எழு பிறப்புகளுக்கு இக்குறளில் குறிப்

பமைத்திருப்பதாக உரையாசிரியர்கள் பொருள்கொண்டிருப் பது தவறெனச் சொல்ல முடியாவிட்டாலும் பருதியார் கொண்ட பொருள் நூலாசிரியர் கருத்தைச் செம்மையில் வெளியாக்குவதாகத் தோற்றுகிறது.

தங்களிடத்தெய்திய துன்பத்தை நீக்கினவர் கேண் மையை உயர்ச்சியினையுடைய மேல்வரும் பிறப்புகள்தோறும் சான்றோர் நினைப்பர். இக்குறளை 6-வது குறளின் தொடர்ச்சி யெனப் பாகுபடுத்தல் மேன்மையாகும்.

மனிதப் பிறப்பு அருமையானது; மிகவும் உயர்ந்த பிறப்பு. "எழுமை யெழு" என்றிருப்பதால் மனிதப் பிறப் பில் குணமாட்சியோடு பொருந்தி நின்றால் பின்வருவன உயர் பிறப்பே என்பது தெளிவாம். அடியில்கண்ட குறள்கள் இதைத் தெளிவுபடுத்தும்.

"விலங்கொடு மக்களனையர்"

"மக்களே போல்வர் கயவர்"

"உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு"

"அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்"

ஆகவே உயர்ச்சியினையுடைய மேல்வரும் பிறப்புகள் தோறும் என்றுரையமைப்பதே சிறப்பு. எழு பிறப்பு ஏழேழு தலைமுறை என்று உலகில் வழங்கிவரினும் மேல் வரும் பிறப்புகள் எவ்வளவென்று நிச்சயிக்க முடியாதாத லாலும் "ஏழுகடல் மணலை அளவிடினும் அதிகம் என திடர் பிறவி அவதாரம்" என்று ஆன்றோர் வாக்கிருப்ப தாலும் பருதியாருரையே பொருத்தமாகும்.

சடையப்ப வள்ளலுக்குக் கம்பர் காட்டிய நன்றியே இக் குறளுக்குப் போதிய சான்றாகும்.

> ஆன்பாலும் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
> தேன்பாய உண்டு தெவிட்டுமனம் தீம்பாய்
> மறக்குமோ வெண்ணெய் வருஞ்சடையா கம்பன்
> இறக்கும்போ தேனு மினி.

8. கொன்றொத்த துன்பத்தை ஒருவர் செய்தாலும் அவரவர்க்கு முன்னால் செய்த நன்மை ஒன்றனை நினைக்க அத்துன்பம் நீங்கும். அவர் செய்த பல நன்மைகளில் ஒன்றனை என்றாவது அல்லது அவர் செய்த நன்மை ஒன்றினை யாவது என்று கொள்ளலாம். நன்மை செய்தவர் தீமை செய்தபோதிலும் முன்பு செய்த நன்மையை மறத்தல் கூடாது.

## திருஷ்டாந்தங்கள்

தருமரும் விராடனும் கவராடும்போது விராடன் சினந்து தாயக்கருவியைத் தருமன் மேலெறிந்தபோது உதிரம் பெருக, அதனைக்கண்ட தம்பிமார்கள் வெகுண்டனர். அச்சமயத்தில் தருமர் கூறிய மொழிகளைக் கருத்தில் வைக்க வேண்டும்.

> ஒன்றுதவி செய்யினுமவ் வுதவி மறவாமல்
> பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்
> நன்றிபல வாகஒரு நவைபுரிவ ரேனும்
> கன்றிடுவ தன்றிமுது கயவர்வினை யாரே.

பின்வரும் ஔவை பாடலும் இதையே வற்புறுத்தும்.

> ஒருநன்றி செய்தாரை உள்ளத்தே வைத்துப்
> பிழைநூறும் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்கு
> எழுநூறு நன்றிசெய்து ஒன்று தீதாயின்
> எழுநூறுந் தீதாய் விடும்.

மாணிக்க வாசகப் பெருமானுக்குப் பாண்டியனியற்றிய கொடுமைகள் ஞாபகத்திற்கே வரவில்லை. பாண்டியன் காலில் விழுந்து குற்றங்களை மன்னிக்க வேண்டிய சமயத்தில் திருவிளையாடல் புராணம் கூறுவது யாதெனின்,

"உம்மைநா னடுத்த நீரால் உலகியல் வேத நீதி
செம்மையா விரண்டும் நன்றாய்த் தெளிந்தது தெளிந்த நீரால்
மெய்ம்மையாம் சித்த சுத்தி விளைந்தது விளைந்த நீரால்
பொய்ம்மைவா னவரின் நீந்திப் போந்தது சிவன்பால் பத்தி"

ஆகவே துன்பத்துட் டுணையாயிருந்தவரைத் துறக்க வேண்டாம்; பிறப்புகள் தோறும் நினைக்க வேண்டும். அவர் தீங்கிழைப்பினும் அவர் செய்த உதவியை மறக்கக் கூடாது. பாக்கியிரண்டு குறளாலும் நன்றியறிதல் ஒப்பற்றஅறமெனச் சித்தாந்தப் படுத்தப்படுகிறது.

## 7. நன்றியறிதல் அறமேயாகும்

9. நன்று என்பது நன்மையாகும், நன்றி என்பது நன்மையை நினைப்பதாகும். ஒருவன் செய்த நன்மையை மறத்தல் மறமாகும். ஒருவன் செய்த தீமையை அப்போதே அவ்விடத்தே மறத்தல் அறமாகும்.

நன்மை செய்த ஒருவன் தீங்கு செய்தால் மறந்துவிடல் சாலும்.

நன்மை செய்யா ஒருவன் தீங்கிழைத்தால் ஏன் தீங்கு செய்யப்படாது என்பாருக்கு வள்ளுவனார்,

"இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு" என்றும்,

"நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை"

என்றும் உபதேசிப்பதால் இவ்வதிகாரத்தில் நன்மையை

என்றும் நினைப்பதும் தீமையை உடனே மறப்பதும் அற மெனக் கூட்டப்பட்டது. முக்திநாதன் என்னும் ஜைன அர சன் மெய்ப்பொருள் நாயனாரை மரண காயப்படுத்தியிருப்பி னும் அவனுக்கு யாவரும் தீங்கிழையாதபடி காப்பாற்றியது இக்குறள் நீதிக்குச் சான்றாகும்.

10. செய்ந்நன்றி ஒன்றைத்தவிர வேறு அறத்தைச் சிதைத்தவருக்கும் அவ்வறத்தைச் சிதைத்த பழிநீங்கி உய் யும் வழி உண்டு. ஆனால் ஒருவன் செய்த உதவியை மறந்த வருக்கு உய்யும் வழியில்லை. நன்றி மறந்தவருக்குக் கொன்றா லொத்த குற்றம் சேரும். ஆன் முலை அறுத்தவனும், கரு வழித்தவனும், குரவனைப் பகைத்தவனும் ஒருவேளை தப்ப லாம். (புறநானூறு 34) செய்ந்நன்றி மறத்தலுக்குப் பிராயச் சித்தம் இல்லையாம். கொடும் பாவத்தின் பயனை அனுப வித்தே தீர்க்கவேண்டும்.

ஆகவே மனிதனாய்ப் பிறந்த ஒருவன் அறத்தைச் செய்யாவிடினும் பெருத்த குற்றமாகாது. நன்றிமறந்தால் அவனுக்கு விமோசனமில்லையாம். நன்மை செய்யச் சித்தமா யிருத்தலும், உதவி புரிதலும், பெற்ற நன்மையை என்றும் நினைத்தலும், தீமையை உடனே மறத்தலும் மனிதர்களின் சிறந்த கடைமைகளாகும். கடமைகளைச் சரிவரச் செய்து நன் னெறி நிற்போமாக.

வாகீசமுனிவர் அருளிய

# ஞானாமிர்த மூலமும் விளக்கவுரையும்

[திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள், போளூர்]

## அகவல் 11

ஊழிதரல் இயைந்த பழித ராகத்(து)
அழியா அறிவன் கழியான், ஒழியாச்
சேதனம் அன்மையின், கடம்போல் ஆகலின்,
எய்யா(து) இயற்றியன் எவன், அவன்பொய்யாப்
புற்கலன் என்ப, ஒற்கமில் சேதனம்
அறிவு வறி(து) அசேதனம் என்ன
நெறியறி புலவர் அறிவு அறிவகையே.

இது பசு உளன் என்கைக்குப் பிரமாணம் என்? என, அந்நுவய வெதிரேகி அனுமானத்தாற் பசுவுண்மை கூறியது.

உரை முடிபு:—ஆகத்து அறிவன் கழியான்; சேதனம் அன்மையின், கடம்போல்; ஆகலின், இயற்றியவன் எவன் அவன் புற்கலன் என்ப; சேதனம் அறிவு, வறிது அசேதனம் என்ன, புலவர் அறிவு அறிவகை இதுவாம் என்பது.

உரை:—தோற்றவொடுக்கங்களில் போக்குவரவு புரிதற்கென இயைந்த, குற்றம் பயக்கும் தேகத்தின்கண் அழிதல் இல்லாத அறிவனாகிய ஆன்மா நீங்காது உளன்; என்னை, தேகம் கெடாத சேதனம் அன்றாகலின், கடத்தைப் போல. ஆகவே இத்தேகத்தை விடாதுபற்றிப் போக்குவரவுகளில் இயக்குபவன் எவனோ அவன் கெடாத ஆன்மா என்று கூறுவர். தளர்வில்லாத சேதனம் என்பது அறிவுடையதென்றும், அசேதனம் அஃது இல்லாததென்றும் சித்தாந்த

நெறியறிந்த புலவர்கள் ஆன்ம தரிசனம்பண்ணும்வகை இது வாம்.

தோற்றவொடுக்கங்களில் என்பது முதலாயின இயை புடைமையாற் பெய்துரைக்கப்பட்டன. இவை இசையெச்சம். உழிதரல்-மாறிமாறி இயங்குதல். பொருட்பொருளதாய நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. செல்வுழிச் செல்லும் மெய்ந்நிழல்போல, ஆன்மாவோடு நீக்கமின்றி ஒன்றி நிற்குமாறு தோன்ற இயைந்த என்றார். "குற்றக் கொள்கலம்" (மணி) என்பவாகலின், தேகத்தைப் பழிதரு ஆகம் என்றார். பழிதரு என்புழி முற்றுகரம் உயிரேறி முடிந்தது. ஆன்மா அநாதியும் சித்துப் பொருளுமாகலின், அழியா அறிவன் எனப்பட்டது.

இது, கடம்போல் ஒழியாச் சேதனம் அன்மையின், உழிதரல் இயைந்த ஆகத்து அழியா அறிவன் கழியான் என அந்நுவயமாமாயினும், பிரதிக்ஞை, ஏது, திருஷ்டாந்தம், உபநயம், நிகமனம் எனவரும் தருக்கநெறிபற்றிக் கிடந்தவாறே கூறப்பட்டது. இதன்கண், "உழிதரல் இயைந்த பழிதரு ஆகத்து அழியா அறிவன் கழியான்" என்பது பிரதிக்ஞை. இதனை மேற்கோள் என்றும் கூறுவர். "ஒழியாச் சேதனம் அன்மையின்" என்பது ஏது. "கடம்போல்" என்பது திருஷ்டாந்தம். இஃது உதாரணம் என்றும் கூறப்படும். "இயற்றியன் எவன் அவன் பொய்யாப் புறக்கலன்" என்பது நிகமனம். அஃதாவது ஏது, திருஷ்டாந்தங்களால் முடிந்ததனை முடித்துக் காட்டுதல். திருஷ்டாந்தத்தைச் சார்த்திக் கூறுவதாகிய உபநயம் இதன்கட் கூறப்படவில்லையாயினும், ஆகலின் என்புழி அவாய்நிலையாற் கொள்ளப்படும்.

"உழிதரல் இயைந்த பழிதரு ஆகத்து அழியா அறிவன் கழியான்" என்ற மேற்கோளில், ஆன்மா சித்தாய் நித்தமாய் இருத்தல் பற்றி, அழியா அறிவன் எனச் சிறப்

பிக்கப் பெற்றதென்பது முன்பே கூறப்பட்டது. கலை முதலிய தத்துவக் கட்டுற்று, மாயா வுதரத்து மருவிநிற்கும் ஆன்மா, போகம் துய்த்து, இருவினையும் கழிதற்கெனப் பல பிறப்பிறப்புக்களைச் செய்வதற்கென வந்து அதனோடு இயைதலின், தேகத்தின் தொடர்பை,உழிதரல் இயைந்த என்றார். அந்தேகம் தானும், தன் பயனை நுகர்வித்தற்கண், அவ்வான்மா தேகமாகிய தன்னையே பொருளெனக் கருதி மேன்மேலும் வினைத் திரளைச் செய்து பிறப்பிறப்புத் துன்பங்களையே எய்துவித்தலின், பழிதராகம் என்றார். “துன்பம் உழத்தொறும் காதற்றுயிர்” என்றார் நம் வள்ளுவப் பெருந்தகையார். வினைத்தொடர்பு கெடுத்துச் சிவபோகப் பேற்றுக்குச் சமைந்த காலையும், ஆன்மாவிற்கு ஞானவுடம்பு நின்று வேண்டுந் துணைமை நல்குதலின், ஆன்மா உடம்பினைக் கழியாது நிற்பதாயிற்றென வறிக.

இனி, ஒழியாச் சேதனம் அன்மையின் என்றது ஏது. சேதனம் என்பது அறிவுடைச் சித்துப் பொருள். அஃது எஞ்ஞான்றும் அழிவில்லதாகலின், ஈண்டு, ஒழியாச் சேதனம் எனப்பட்டது. தேகம் என்பது எஞ்சி நின்றது. சேதனமாயின், பிறர் இயக்க இயங்காது தானே இயங்கும் என்பது கருத்து. இதனை விளக்குவதே கடம்போல் என்ற திருஷ்டாந்தமாகும். கடம், குடம் வடசொல். குடமாகிய அசேதனப் பொருள் ஒருவன் எடுத்தேக ஏகுவதல்லது தானே ஏகுமாறு இல்லை என்றவாறு. ஆகவே, தேகமாகிய அசேதனப் பொருளும் தானே போக்கு வரவு செய்யாதென்பது பெறப்படும். இஃது உபநயம். இதனால் அசேதனமாகிய தேகத்தைக் கூடிப் போக்குவரவு பண்ணும் சேதனன் எவனோ அவன் ஆன்மா என்றவாறு.

இவ்வாறு உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் தேகத்தின் வேறாய், அதனைப் போக்குவரவு பண்ணும் தேகியாகிய

ஆன்மா உளன் என ஆராய்ந்து காணும் இந்த நெறி அந்நுவயவெதிரேகி அநுமானம் எனப்படும்.

தேகத்தோடு இடைவிடாது கூடியிருந்து போக்குவரவு பண்ணும் இயல்பு நோக்கியே, தேகியாகிய ஆன்மாவை எய்யாது இயற்றியன் என்றும், அவன், தேகம்பலவும் மாறி மாறி எடுத்தானாயினும், கேடிலன் என்பதனை வற்புறுப்பார் போய்யாப் புற்கலன் என விதந்தும் கூறியருளினார். இவ்வியல்புதானும் சித்தாந்தத்தே நின்று சிவன் திருவருட்பேற்றால் மெய்யுணர்வால் உணரும் பெருமக்கட்கன்றி ஏனோர்க்கு விளங்காமை கண்டே, என்ப என அவர்மேல் வைத்துக் கூறினார்.

தேகமே, ஆன்மா எனக்கருதி மயங்கும் மயக்கவுணர்வு நீங்கி, தேகம் அறிவில்லாத அசேதனம் எனவும், ஆன்மா அறிவுடைய சேதனம் என்றும் பகுத்து நோக்கி, சேதனமாகிய ஆன்மாவின் சைதன்யவியல்பினைக் காண்பது ஆன்மதரிசனமாதலால், அதற்கும் இதுவே நெறியென யாப்புறுத்தற்கு, "ஒற்கமில் சேதனம் அறிவு, வறிது அசேதனம் என்ற நெறியறிபுலவர் அறிவு அறிவகையே" என்று முடித்தார். ஆணவாதி மலசம்பந்தத்தால் மறைப்புண்பதேயன்றி, தன் நிலையில் ஞானவடிவிற்றென்பது பற்றி, ஆன்மநிலையை, ஒற்கமில் சேதனம் என்றும், சைதன்யமன்மை அசேதனம் என்றற்கு வறிது அசேதனம் என்றும் கூறினார். வறுமை ஈண்டு இன்மை குறித்து நின்றது. அறிவு, அறிவின்மை யென்ற இருவகை நெறிகளையும் ஆராய்ந்து, அறிவு நெறியை மேற்கோடலே புலவரது புலமைப்பயன்; அதனையே அவர் செய்யற்பாலர் என்பார் நெறியறி புலவர் என்றார். அறிவு, அதனையே இயல்பாகவுடைய ஆன்மா. இது என்பது சொல்லெச்சம்.

இதுகாறும் கூறியவாற்றால், தேகத்தோடு கூடி நிலவும் ஆன்மா தேகத்தின் வேறாய் உளன்; தேகம் கடம்போல் அசேதனம்; ஆன்மா சேதனம். அசேதனமாகிய தேகத்தையும், சேதனமாகிய ஆன்மாவையும் பகுத்து நோக்கி, அறிவாகிய ஆன்மதரிசனம் பண்ணுவர் புலவர் என்றவாறும்.



# தத்துவானுபோகக் கட்டளை

(மலர் கக - இதழ் - எ - ௩௫௨-ம் பக்கத் தொடர்ச்சி)

## மாயை

மாயை எவ்வண்ணமா யிருக்கும்? காரணமும் காரியமும் காரியப்படுகையும் காரியப்பட்டு விட்டதுமா யிருக்கும்.

இதிற் காரணமாவது பொய்யா யிருக்கிறது. அதெது? பிரபஞ்சத்தை மெய்யெனும்படி மயக்குகிறது.

காரியமாவது தனு-கரண - புவன - போகங்களா யிருக்கிறது. தனுவாவது பஞ்ச பூதத்தாலே எடுத்த தேகம்; கரணமாவது தத்துவங்கள்; புவனமாவது யாதொரு விஷயங்களைப் புசிக்குங் காலத்து நிற்கிற இடம்; போகமாவது புசிப்பா யிருக்கிறது. இவ்விதமா யிருப்பது காரியம்.

இனிக் காரியப்படுகையாவது இந்தத் தனு - கரண - புவன - போகங்களில் நின்று வழங்குகிறது.

காரியப்பட்டு விட்டதாவது வழக்கங் குலைந்து கிடக்கிறது.

இது எதுபோல? மண்போல; மண்ணானது ஒரு முதலா யிருக்க சால் - குடம் - சட்டி - பானையாய் அவையிற்றைக்

கொண்டாளுகையும் அவை ஆட்சி குலைந்து கிடக்கும் வகையும்.

மாயைக்குத் திருஷ்டாந்தம் மண்; மாயையினுடைய காரியத்துக்குத் திருஷ்டாந்தம் சால் - குடம் - சட்டி - பானை யாகுதல்; மாயையினுடைய காரியப் படுகைக்குத் திருஷ் டாந்தம் அவையிற்றைக் கொண்டாளுகை; மாயையினுடைய காரியப்பட்டு விட்டதற்குத் திருஷ்டாந்தம் இவை யெல்லாம் ஆட்சி குலைந்து கிடக்கிறது; பரமேசுவரனுக்குத் திருஷ்டாந் தம் குலாலன்; ஈசுவரிக்குத் திருஷ்டாந்தம் திரிகை - உ.

## கன்மம்

இனிக் கன்மமென்கிற தெது? சஞ்சிதம்-பிராரத்துவம்-ஆகாமியமுமா யிருக்கிறது.

இதில் சஞ்சிதமாவது - மந்திரம் ௭௭-ம், பதம் ௮௧-ம், அக்கரம் ௫௧-ம், புவனம் ௨௨௪-ம், தத்துவம் ௩௬-ம், கலை ௫-ம் இப்படியாகிய சடத்துவாக்களிலும் கட்டுப்பட்டு மிகுதிக் கன்மமென்று பெயருமாய்ப் புண்ணிய பாவங்கள் கலந்து நிற்கும்.

இனிப் பிராரத்துவமாவது - தெய்வீகம்-உற்பவுதிகம் - ஆத்மீகம் என்று மூன்றும்.

இதில் தெய்வீகமாவது அசனிபாதம் முதலாக அசிந்திதமாய் வருமிது பிராரத்துவத்தின் விதப்பிரியங்கள்.

உற்பவுதிகமாவது கன்மம் முதலாகிய உள்ளூறு நோய்களும் இவையிற்றிலுண்டான பிரியாப்பிரியங்களும்.

ஆத்மீகமாவது அவனவளதுவாலே வருகிற இதவகிதங்கள். இவைதாம் அசேதன முன்னிலையாலும் 'வந்து' சாரும். இப்படிச் சாரத்தக்கது முற்செனனத்திலே செய்த தொழிய வாராது.

இப்படி வருகிற பிராரத்துவம் புசிக்குமடைவு எப்படி? யாதொன்றுங் கண்ணுக்குப் புலப்பட்டு, கைக்குப் பரபரக்கத் தக்கதெல்லாம் மாயையின் காரியமாதலானும் இதமகிதம் புசிக்கத் தக்கதெல்லாம் பண்ட பதார்த்தத்தைச் சார்ந்து வருகையாலும் பிராரத்துவம் மாயையைச் சார்ந்து வருகையாலும் பிராரத்துவம் சார்ந்து வருமென்று சொல்லப் பட்டது.

இப்படி வருகிற முறைமையைக் கொண்டு அருளறிவி லாதார் மாயையைப் புசிப்பென்று சொல்லுவார்கள்.

இனி ஆகாமியமாவது, இந்தப் பிராரத்துவம் புசிக்கை யிலே மறுமைக்கு வித்தாக ஏறுகிற இதமகிதம். இத மகிதம் ஏறுகிறபடி யெப்படி? பிராரப்தமான புண்ணிய பாவங்கள் புசிக்கையிலே நாம் பண்ணின கன்ம பலமல்லவா புசிக்கிறோமென்று விசாரியாமலும், நாம் பண்ணின கன்மம் நாம் அறிவதில்லை, இவையிற்றைக் கூட்டுகிறவர் நம் முடைய கர்த்தாவல்லவா என்றறியாமலும் யான் செய்தேன் பிறர் செய்தார் என்று நீ சுட்டுகையாலே அதனாலுண்டான பிரயோசனம் உனக்கு மேலைக்கு விளைவாகிய ஆகாமிய மாம்—௩.

## மகா மாயை

மகாமாயை யென்கிறதெது? சுத்தமாயை.

வயிந்தவமென்றும் குடிலையென்றும் குண்டலினி யென்றும் மாயை யென்றும் சத்தப் பிரமமென்றும் அசுத்தமாயைப் பிரேரக மென்றும் விந்து வென்றும் சேஷமாயை யென்றும் சத்தி நிலை யென்றும் பெயர்.

இப்படிப் பெயர் பெற்ற சுத்தமாயை மூவகை ஆத்மாக் களிடத்திலும் நிற்கிறபடி யெப்படி? விஞ்ஞானகலர் பிரள யாகலருக்குத் தனு-கரண-புவன-போகங்களுமாய்ச் சருவ

சங்கார காலத்து இந்த இருவருக்கும் உபாதானமாயக காத தாவுக்குச் சுதந்தரமான வடிவுமாயிருக்கும். இதுவொழிந்து சகலராகிய ஆத்மாக்களுக்கும் அசுத்தமாயையைச் சார்ந்து வருகிற கன்மம் அருந்துகை காரணமாகவும் இவர்களுடைய இச்சா ஞானக்கிரியை சீவிக்கை காரணமாகவும் தீட்சாவான் மேலாலவத்தைப்படுக்கைக்குக் கருவியுண்டாகைக்குக் காரண மாகவும் சுத்தகத்துவங்களைந்தையும் வாக்குக்கள் நாலையும் அட்சரங்கள் ஐம்பத்தொன்றையும் சத்தகோடி மகாமந்திரங் களையும் சகல சாத்திரங்களையும் தோற்றுவித்து தான் அசுத்தமாயையைப் பிரேரிக்கிறாற் போலத் தன்னை அரு ளாலே பிரேரிக்கப்படும்.

இந்த மலத்துக்குக் காரணமாவது அசுத்தமாயையைப் பிரேரிப்பிக்கிறது.

காரியமாவது முன்பெண்ணப்பட்ட சிவ தத்துவங்களைந் தும் வாக்குக்கள் நாலும் அட்சரம் ஐம்பத்தொன்றும் சத்த கோடி மகாமந்திரங்களும் சகல சாத்திரங்களுமாம்.

காரியப்படுகையாவது இம்முறை வழங்குகை.

காரியப்பட்டுவிட்டதாவது குடிலையொழிந்து வேறொன் றுமில்லையாய் அசுத்த மாயையைப் பிரேரிப்பிக்கிறதொழிந்து நிற்கிறது. அசுத்த மாயையிற் காரியம்போலே சுத்தமாயை யிற் காரியம் கண்ணுக்குப் புலப்பட்டுக் கைக்குப் பரபரத்து இருக்கத்தக்க பண்டமல்லாதபடியாலே பிரேரகமொழிந்து நிற்கிறதே காரியப்பட்டுவிட்ட தென்கிறதொழிந்து மற்றது போல் இதுவென்று பண்டமாகச் சுட்டிக்காட்டுகைக்கு இல்லை யென்றறிக.

மாயை யென்கிறது மயக்கம். மகாமாயை யென்பது பெரிய மாயை யென்றது, பெரிய மயக்கமென்றது.

பெரிய மயக்க மென்று சொல்ல வேண்டுவானேன் என்னில் சிறிய மயக்கமென் றுண்டாகையாலே. அதெது? அசுத்த மாயையில் மயக்கம்.

அசுத்த மாயையில் மயக்கத்தைச் சற்று மயக்க மென் றும் சுத்த மாயை பெரிய மயக்க மென்றும் சொல்ல வேண்டு வானேன்? அசுத்தமாயை சகலரான ஆத்துமாக்களை மயக்கு கிற தொழிந்து மற்று மயக்கமாட்டாது. சுத்த மாயையன்றி அசுத்த மாயை தானும் மயக்கமாட்டாத படியினாலே அத்து டனே கூடிநின்று மயக்கியும் விஞ்ஞானகலர் பிரளயாகலரை மயக்கியும் செய்கையாலே மகாமாயை யென்று சொல்லப் பட்டது.—ச.

## திரோதாயி

இனித் திரோதாயி யென்கிற தெது? மறைப்பிக்கிறது. என்னத்தை மறைப்பிக்கிறது? அருளை.

அருளை மறைப்பிக்கிறது திரோதாயியாகில், ஆணவம் மறைக்குமென்கிறதென்ன? ஆணவம் ஆத்ம சொரூபத்தைத் தெரியாமல் மறைக்கும். ஆத்ம சொரூபத்தைத் தோன்று மல் மறைக்கையாலே பாச சொரூபமும் தோன்றாது. பாச சொரூபமும் ஆத்ம சொரூபமும் தோன்றாதபடியாலே சிவ சொரூபமும் தோன்றாது. ஆகையாலே பதி பசு பாசமும் தோன்றாமல் மறைக்கும் ஆணவ மலமென்று சொல்லப்பட்

ஆனால் திரோதாயி மறைக்கிற அவசர மெப்படி? ஆணவ மலம் ஆத்ம போதத்தை மறைக்கிறபொழுது ஒக்க நின்று மறைப்பிக்கும். இது வொழிந்து ஆணவமலம் நீங்கி ஆத்ம சொரூபத்தைத் தெரிந்த காலத்திலும் இந்த மலத்தை நீக்குகிற ஆத்ம சொரூபத்தைத் தெரிவித்தது அருளல் லவோ என்றறியாமலும் மறைத்து நிற்கும் மலம் நீங்கின

காலத்துத் தனக்குத் தாரகம் அருளல்லவோ என்றறியாம லும் மறைப்பித்து நிற்கிறபடி திரோதாயி இப்படியருளுடன் பொருந்திக் கூடிக்கலக்கையில் அருளுடனேயல்லவா பொருந் திக் கூடிக்கலக்கிறோ மென்றறியாமலும் பண்ணுகிறதே திரோதாயி மறைக்கிறதென்றறிக.

ஆணவமலத்தை நீக்கி ஆத்ம சொரூபத்தைத் தெரிசிக் கக் காட்டுகிறது மலம் நீங்கின காலத்தில் நமக்குத்தாரக மாயிருக்கிறது அருளல்லவா என்று மறியாதிருக்கும் அருள் பிரகாசித்தபோது திரோதாயி நீங்கிற்றென்றறிக.

## அனுபோகக் கட்டளை முற்றிற்று

ஸ்ரீமஹாலிங்க சிவப்பிரகாச தேசிக சற்குரு சுவாமிகள் திரு வடிக்கடிமையாகின்ற நாயேன் சுவயம் பிரகாசம். திரு வாழ்க.

[குறிப்பு:—இதுவரை அச்சில் வெளிவராத சைவசித்தாந்தக் கட்டளைகளுள் இதுவுமொன்று. இதன் ஒரே ஓலைப்பிரதி விளாகம் திரு. ந. கணபதிப் பிள்ளை, B. E., [Retired Executive Engineer], அவர்களிடமிருந்து கிடைத்தது. இதைப் பார்வையிட்ட திரு. அனவரதவிநாயகம் பிள்ளையவர்களுக்கு எனது நன்றி உரியதாகின் றது. இதன்கண் சில சொல்லாட்சிகள் விளங்காதனவா யுள்ளன. வேறு பிரதிகள் கிடைப்பின் பின்னர் அவை விளங்கக்கூடும். மற்றக் கட்டளைகளைப் போலன்றி இந்நூல் தத்துவங்களை விளக்கிக்கூறும் முறை மிகவும் புதியது.—மு. அருணாசலம்.]

பாம்பன் - குமரகுருதாச சுவாமிகள் அருளிய

## எ - வது

# சமயங்களைக் குறித்த வியாசம்

(மலர் கக - ௬ - ௩௦௪-ம் பக்கத் தொடர்ச்சி).

அது வைகுண்டமென்றுஞ் சொல்லப்படும். அன்றி, வாசுதேவன், பிரத்தியும்நன், அநிருத்தன், சங்கர்ஷணன் என்ற நான்குமே அந்த வியூகங்களென்றும், அவற்றுள் வாசுதேவனே குணாதீதன், சத்துவ குணத்தையுள்ள பிரத்தியும்நனே அவதாரங்களெடுத்து இரக்ஷிக்கிறவன், இரஜோ குணமுள்ள அநிருத்தனே பிரமாவாயிருந்து சிருஷ்டிக்கிறவன், தமோ குணத்தையுள்ள சங்கர்ஷணனே உருத்திரனாயிருந்து உலகத்தை அழிக்கிறவனென்றும் அதனால் பிரத்தியும்நன் முதல் மூவரும் குணவடிவரென்றுஞ் சொல்லப்படும். இக்கருத்தாகவே வியாசருடைய பிரமசூத்திரத்திலும் விளம்பப்படும். அன்றி,

வைஷ்ணவாகமத்துள் குணாதீதமான (பிரம்மம்) வாசுதேவ வியூகத்தினால் தாமத குணமுள்ள (உருத்திரன்) சங்கர்ஷண வியூகமும், அதினின்றும் சாத்துவிக குணமுள்ள (விஷ்ணு) பிரத்தியும்ந வியூகமும், அதினின்றும் இராஜத குணமுள்ள (பிரமன்) அநிருத்த வியூகமும் பிறந்ததெனச் சொல்லப்படும்.

மார்க்கண்டேயம் தருமபக்ஷி ஜைமினி சம்வாதம் ச-வது அத்தியாயத்தில் அந்த நான்கு வியூகங்களையுங் கூறிய விடத்தில் சத்தாகவுள்ளதே விஷ்ணுவினுடையமூலவடிவம், தாமத குணத்தைப் பொருந்திப் பூமியைத் தாங்கும் ஆதிசேடனாகவிருப்பதே இரண்டாவது வடிவம், சத்துவ குணத்தைப் பொருந்தி உயிர்களை இரக்ஷிப்பதே மூன்றாவது வடிவம், இராஜத குணத்தைப் பொருந்தி கடல் மத்தியிற் பாம்பின் , படுக்கைமேற்படுத்துப் படைப்புத் தொழிலுள்ளதே நாலாவது வடிவமென்று சொல்லப்படும்.

இந்த பாஞ்சராத்திர மதத்தில் வாசுதேவனை ஆதியென்பதால் அந்தமுண்டென்றும், கொண்டவடிவு மாயாசத்தி வடி-

வென்பதால் நிறையறிவு இன்றென்றும், மாயை அல்ல வெனில் தனதிச்சையாலே பிரபஞ்சமிரக்ஷிப்பது காரணமாக வெனல் பொருந்தாதென்றும், வேதந் தெரிந்தவனென்பதால் அவ்வேதம் அவருக்கு முன்னுளதாமென்றும், ௩-வது வியாசத்திற் றுலக்கியபடி அவதாரங்கள் அழிந்திருப்பது மன்றி பிருகு ததீசி இவர்களாற் சாப மனுபவித்து உயிர் மாண்டும், பரசுராமன் ராமன் பலராமன் இவர்களானபோது பரமசிவனை வழிபட்டும், கிருஷ்ணனானபோது சக்கரத்துக்குத் தவஞ் செய்தும், மேகவாகன கல்பத்தில் தனது இரக்ஷகத் தொழில் பலிக்கவென்று விஷ்ணுவாகிய தானே மேகமாகிச் சிவனைச் சுமந்து திரிந்தும், சிவன் அக்கினி மலையானபோது விஷ்ணு அடிதேடிக் காணுதலுந்தும் நின்றதால் வாசுதேவன் மாயா மலத்தோடு கூடிய ஜீவனென்றும், கேசவனென்பதற்குப் பொருள் சவத்தைத் தலையிலுடையவன் அதாவது: பைப்பலாதம், ஸ்காந்தம் இவைகளிற் சொல்லப்படுமாறு தக்ஷயக்கிய நாசத்தில் வீரபத்திரரானவர் தேவப்பிணங்களை ஹரி தலையிலேற்றி யக்கிய குண்டத்தைச் சுற்றிவரும்படி செய்த அஞ்ஞான்றேற்பட்ட பெயரென்றும், - விஷ்ணு வாக்கியம்: "சர்வலோகம் அகங்கர்த்தா மமகர்த்தா மகேசுரா" அருத்தம்: எல்லா உலகத்திற்கும் நான் கர்த்தா என் கர்த்தா மஹேசுரா", "விஷ்ணுபக்தே சகஸ்ரேஷு சிவபக்தேக விசேஷதா" அருத்தம்: ஆயிரந் தாதர்க்கு ஒரு சிவனடியார் சமம் என நூலாதாரமிருப்பதால் வாசுதேவன் முழுமுதற் கடவுளன்றென்றுங் கணிக்கற்பாற்று.

விஷ்ணு மாயாமலத்தோடு கூடிய ஜீவனென்பதற்குப் பிரமாணம்: தத்துவப்பிரகாச சுவாமிகள் சைவாகமப்படியருளிய தத்துவப் பிரகாசம் பசுவிலக்கணம் உ௩-வது "குறித்த கீழோர்" என்றசெய்யுளில் "நிறுத்த சகலத்தோர்களயன் மாலே முதலாங்கீழ் நரகருரு நிலவித்துப் பைவர்" என்று

வருவதுகாண்க. இதனால் ஆத்மாக்களை அணுத்தன்மை செய்தல்பற்றி ஆணவமென்று பேர்படைத்த அவ்வாணவ மலம் ஒன்றுமட்டுமுள்ள விஞ்ஞானகலராகிய அனந்தாதி அஷ்ட வித்தியேசுரர்கட்கும், அணுசதா சிவாதி கன்மமென் னும் மலம் இரண்டுமட்டுமுள்ள பிரளயாகலராகிய உ௨௪ - புவன நாயகர்கட்கும், வீரேசர் ஸ்ரீகண்டர் முதலிய ௧௧அ - உருத்திரர்கட்கும் கீழ்ப்பட்டு ஆணவம் கன்மம் மாயை யென்னு மும்மலங்களோடு கூடிய சகலராகிய நரகவுலகத்தா ரோடும் ஏனைய பிராணிகளோடுஞ் சேர்ந்துள்ளவரே பிரம் மாவும் விஷ்ணுவுமென்றறியலாம். இவ்விஷ்ணுவைத்தானே மூழுமுதற் கடவுளென்கிற மதமானது தக்ஷப்பிரஜாபதி யக் கிய காலத்தில் வேத விரோதமாய் ஏற்பட்டதாகும். அக் காலத்து அதை யங்கீகரித்திருந்த தக்ஷன் மரபாராகிய பிரா மணரைத் ததீசிமுனிவர் கண்ணுற்று " நீவிர் எந்நாளும் உல கில் இவ்விதப் பிராமணராகவே பிறந்து வேத மார்க்கத்தைக் கைவிட்டுச் சிவனையுஞ் சிவசின்னத்தையுஞ் சிவனடியாரையுந் தூஷித்துச் செத்துச் சிவகதி சேராதுழலக்கடவீர் " என் றிட்ட சாபத்திற்குட்பட்டவரே வைணவரென்றும். பிர மாணம் :—

கந்தபுராணம் - ததீசி யுத்தரப்படலம்

" பேசரிய மறைகளெல்லாம் பராபரனீ
யெனவணங்கிப் பெரிது போற்றும்
ஈசனையு மன்பரையு நீற்றெருடுகண்
டிகையினையு மிகழ்ந்து நீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும்
பிறந்திறந்து கதியு றாது
பாசமத னிடைப்பட்டு மறையுரையா
நெறியதனிற் படுதி ரென்றான். "

இவ்வித சாபத்திற் குட்படாதவர் யாதொரு காரணத்தால் வைணவராய்ப் பிறந்திருப்பினும் சிவதூஷணஞ் செய்யாது சிவனை வழிபட்டுச் சிவகதி சேர்பவராவர்.

கஅ. வைணவமென்பது :—ஆன்மாவானது புருடன். விஷ்ணுவானவர் பரமபுருடன். இப்பரமபுருடனாகிய புருஷோத்தமனுக்குப் புருடன் அடிமை. அதனாற் புருடனானவன் பரமபுருடனைக் கர்த்தாவாகக்கொண்டு தாசமார்க்கமான விசேஷண விசேஷபாவத்தால் வழிபட்டு நிற்க மரித்தபின் வைகுண்டத்திலும் அந்நெறியிலே நிற்பன். ஆதலாலிட்டு அந்தக் காயம் அழியாத காயமாம். அதுவே முக்தியென்னும்.

இதில் பாஞ்சராத்திரத்திற் பகர்ந்த நியாயம் பொருந்தவதோடு காயத்திற்கு உபாதானமான கன்மத்தையும் மாயையையும் முத்தியென்று உணராதுரைத்ததாயுங் கணிக்கற்பாற்று.

கக. வைகாநசமென்பது :—உள்ளே தோற்றும் உயிராகிய நக்ஷத்திரத்தைக் களங்கமாகிய மலம் மறைக்கும். அஷ்டாக்ஷரமாகிய 'ஓம் நமோ நாராயணாய' நம: என்றும், கேசவாய நம: தாமோதராய நம: பத்மநாபாய நம: ஹரியே நம: விஷ்ணுவே நம: கிருஷ்ணாய நம: மாதவாய நம: [illegible] ாய நம: அச்சுதாய நம: பரமபுருஷாய நம: லட்சுமிகாந்தாய நம: இராமச்சந்திராய நம: என்றும் பிறவும் ஜெபித்து நாராயணனையே முக்காலமாதல் ஒருகாலமாதல் பூஜிக்க அக்களங்க நீங்கும். அப்போது மாயா தேகத்தை மாற்றித் திவ்ய தேகமாக்கி வைகுண்டஞ் சேரும்படி நாராயணனே செய்து இரக்ஷிப்பனென்றும். நரனென்கிற பரமாத்மனால் உண்டாக்கப்பட்ட ஜலத்திற்கு நாரமென்று பெயர். அது அவனுக்கு முதலில் அயனம் எனவே யிடமாகவிருக்கிறது. அதனால் நாராயணன் என்று பெயரென்றும் பொரு

ளாம். இவ்விதமே மனுஸ்மிருதி க-வது அத்தியாயத்தி லும், மார்க்கண்டேயம் ச-வது அத்தியாயத்திலுஞ் சொல் லப்பட்டிருக்கிறது.

இம்மதத்தில் செய்த ஜெபமும் பூஜையுங் கண்டுணர வைகுண்டத்திலும் உருவேண்டுமென்பதால், இதிலுங் கண் டமும் மாயையும் முத்தியென்ற முடிவேயாயிற்று. பாஞ்ச ராத்திர நியாயத்தையும் பொருந்தும்.

உ௦. ஜோதிடமென்பது :—வேதாங்கம் ஆறிலொன்று கும். அதில் கர்ப்பாதான முதலாக உடலுண்டாவதற்கும் அவ்வுடல் நீங்குகைக்கும் ஈதாகும் ஈதாகாதெனும் முகூர்த் தத்தையும் சர்வ பூதபௌஷிய வர்த்தமானங்களையும் கரத லாமலகம்போல அறிவிக்கும் இந்நூலைப்போல ஒருநூலுமறி வியாது. இந்நூலனுதியாகும். இதையொருவர் கற்பித்தா ரென்னில் அவரைக் கற்பித்தற்கும் அது முகூர்த்த விசே ஷமாயிருக்கும். ஆதலால் இந்நூல் வழிக்கொண்டு நடக்கத் தீவினையின்றி நல்வினையே கூடும். இருவினைக்கீடாய் சுக துக்கங்களைக் கொடுக்கின்ற நவக்கிரகங்களைப் பூஜை செய்ய முத்தியுஞ் சித்திக்குமென்றும். இம்மதத்தவரை நவக்கிரக வாதிகளென்றுங் காலவாதிகளென்றுஞ் சொல்லலாம்.

இதில் பசிப்பிணியைத் தணிக்கும் ஔஷதமாகிய அன் னத்தைத் தலைமையாய்க்கொண்டு அதைப் பாகபக்குவஞ் செய்து கொடுத்த நிமித்தகாரணனை விட்டுவிடுவதென்னும் அவிவேகமே பிறக்கின்றது.

உக. மாயாவாதமென்பது:—வேதாந்த நூலிலொன்று கும். அதில் பாற்கரிய வாதத்திற்சொன்ன பிரம்மமே பார மார்த்திகத்தில் மெய்ப்பொருள். அஃதொழிந்து காணப் பட்ட பொருளெல்லாம் (சிப்பி) இப்பியில் வெள்ளிபோலப் பொய்ப்பொருள். ஜெகத்திற்கு (முதற்காரணம்) உபாதா னம் மாயை. அம்மாயை பிரமம்போல மெய்ப்பொருளு

மன்று; முயற்கொம்புபோலப் பொய்ப் பொருளுமன்று. மாயைக்கு வேறான பிரம்மசொரூபம் நான். அதை வேதாந்த விவேகஞானத்தால் அறிய அர்ச்சனை தர்ப்பணம் அக்கினி காரியமாதி கிரியையெல்லாம் அக்கினியிலிட்ட காஷ்டம் அக்கினியாமாறுபோல ஏய்ந்து அசிபத ஐக்கிய முத்தியாகு மென்றும்.

இதில் நிரீசுர சாங்கியத்தில் விளக்கிய புருட தத்துவத்தையே பூரணப் பொருளாகக்கொண்டு மேலையனுபவங்கள் குன்றி நிற்பதென்பதாயிற்று.

௨௨. வேதாந்தமென்பது :—ஆன்மாத்தானே முதலில் ஆன்மாவாய்ப் பின்பு பரமாய் அப்பாற் பரமாநந்த சொரூபமாயாகும். அதனை ஆன்மா கூடியறியுங் கருவிகள்: பிருதிவியாதிபூதம் ௫. சுரோத்திராதி பொறி ௫. சப்தாதிபுலன் ௫, வாக்காதிகன்மேந்திரியம் ௫, மனாதிகரணம் ௪, ஆக ௨௪-ம் அவஸ்தையாகிய ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென ௩-ம் அச்சுழுத்திமேல் துரியமும், அதில் துரிய விலாசமும், காலபாதுரியமும், அதன்மேற் பரவிலாசமும் அதன்மேற் பரதுரியமும் அதன்மேற் சுகவிலாசமும் அதன்மேல் துரியாதீதத்தில் புலனற்ற பாழும், அவ்விலாசமாகிய ஆத்ம தரிசனமும், போதமற்ற பாழும் அவ்விலாசமாகிய பர தரிசனமும், சொல்லற்ற பாழும் அவ்விலாசமாகிய சொரூப தரிசனமுமான மூன்று சூனியமுங் கடந்த விடத்தே அகார, உகார, மகாரமாகும். அதற்கு மேலாய் விளங்கப்பட்ட சத்தியம் ஞானம், அனந்தம், ஆநந்தமென்ற தரிசனங்களாகும். அங்ஙனமே மௌன முத்திரை. அம்மௌன முத்திரையென்று கண்ட கருத்தையும், அறவே விட்டுச் சும்மா விருந்தபடியே யிருப்பது முக்தி. இவை யெல்லாமாய் நின்ற பொருளானது: குருவினால் மும்முத்திரை மூலம் அறிவிக்கப்பட்ட சுகாதீதமாகவுள்ள அறிவினது நிலைமையே யென்றும்.

இதில், மூன்றும் பாழிற் கருத்துக் கெட்டுவிட்ட தென்பதால் முக்திப் பயனென்பதுமின்றி முக்திபெற்றது எவனென்பதுமின்றி யொழிவதொடு பிரபாகரத்திற் சொன்ன பிருகிருத்திரையைத் தானே முக்தியென்றும், நிரீசுரசாங்கியத்தில் விளக்கிய புருட தத்துவத்தைத்தானே கர்த்தாவென்றும் கொள்ளலாயிற்று.

உ௩. துவிதவாத மென்பது:—மத்துவாசாரியராற் செய்யப்பட்ட மத்துவ பாஷிய மென்னும் நூலிற் குரியதாகும். அதில் ஆன்மாவானது சரீரத்திலே ஓரணுவா யிருக்கும். அஃது சமாராதனை வழிபாடான புண்ணியங்களாலே பாவந் தொலைத்து -ல் விட்டவுடனே விஷ்ணு கணங்களாற் கொண்டு போகப்பட்டு மலநீக்கிச் சுத்தி செய்வதற்காக வைகுண்டத்தயலிலுள்ள விரஜா நதியின் முழுகுவித்துப் பின்னர் வைகுண்டத்திற் சேர்க்கப்படும். அப்போது சங்கு சக்கர மேந்தி விஷ்ணுவினெதிரே அவ்வான்மாவு மிருப்பன். அதுவே முக்தி யென்றும்.

இதில் சாயுஜ்ய மற்ற யோகச் சரியை முக்தியையே சிரேஷ்டமென்றும், பாஞ்சராத்திரத்திற் பேசும் விஷ்ணுவையே பரமபொருளென்றுங் கொள்ளலாயிற்று.

உ௪. அத்துவிதவாத மென்பது:—பிரம்மமென்ற ஒரு பொருளே ஆன்மாக்களாய் அனுதியான வுடலைப் பற்றி நிற்கும். அப்படிப்பட்ட ஆன்மாவானது : தான் பிரம்மமான தன்மை கண்டகாலை கேசவாய கேசவாயவென்று வணங்க நான் பிரம்மமென்னும் 'அஹம்பிரம' மாகும் என்றும். இக்கருத்து நீலகண்டாசாரியர் செய்த நீலகண்ட பாஷியத்திற் கூறும் முடிவுக்கிணங்கி இராமாநுசாசாரியர் செய்த இராமாநுச பாஷியத்திற்சொல்லப்படுகிற விசிட்டாத்து விதத்தையும் பொருந்தும். விசிட்டமென்பது சேர்க்கை. விசிட்டாத்துவித

மென்பது சேர்ந்த தன்மையினால் ஒன்றெனுங் கொள்கை யென்றும்.

இந்த அத்துவித வாதத்தினும் பாஞ்சராத்திரத்திற் சொல்லும் விஷ்ணுவையே முதற் கடவுளென்பதாயும், பிறவும் பிரம்மமென்பதாயுங் கொள்ளலாயிற்று.

ஈண்டு விளக்கிய புறச்சமய பேதம் உ௪-ல்; க-முதல் அ-வரையுள்ள மதஸ்தர் வேதநிந்தகரும்; (நிரீசுரவாதி) நாஸ்திகரும்; ஆசாரம், தர்மம், முக்தி நியமம் என்பவைக ளில்லாதவரும்; ௯-முதல் க௯-வரையுள்ள மதஸ்தர் வேத வுடன்பாட்டால் வேதமும் கர்மமுமே தெய்வமென்கிற நாஸ்திகரும்; முடிவான முக்தி நியமமில்லாதவரும்; ௧௧- முதல் உ௪-வரையுள்ள மதஸ்தர் வேதாந்த வாக்காகிய பேதகரும், முடிவான முக்தி நியமமில்லாதவருமாவர். உ0- உக-உஉ இந்த மதஸ்தரையும் நிரீசுரவாதியாகவே கோள் ளற்கிடமுண்டாகிறது.

இனி உட்சமயத்தைத் துலக்கக் கடவேம். அஃது சைவம், பாசுபதம், வாமம், பைரவம், காளாமுகம், மஹா விரதம் என ஆறு வகையாகும். இவ்வாறு வகையில், சைவ மானது: சுத்த சைவம், அசுத்த சைவம், மிச்சிர சைவம், சித்தாந்த சைவம், அநாதி சைவம், அவாந்தர சைவம், வேத சைவம், அநுசைவம், ஆதிசைவம் என ஒன்பது பேதமும்; பாசுபதமானது: பாசுபதம், சூரியவாதம், சந்திரவாதம் என மூன்று பேதமும்; வாமமானது: வாமதந்திரம், மந்திரவாதம், இயந்திரவாதம், ஔஷதவாதம், கர்மவாதம், அத்துவித வாமம், துவிதவாமம், மிச்சிரவாமம், வாமசித்தாந்தம் என ஒன்பது பேதமும் ஓரொன்றான பைரவமும், காளாமுகமும் மஹாவிரதமு மாகும்.

இங்ஙனம் உட்சமயம் அறுவகையும் அவற்றின் பேத முமான இந்த ௨௪ பகுதிகளின் தீர்மானத்தையும் ஈண்டு விவரித்து விளக்கி நிற்பாம்.

## (௧) சைவம்

சிவசம்பந்த மென்றும். அதாவது :—சிவத்தொடு ஆன்மா சேருவதெனப் பொருளாம். இச்சைவ பேதம் ஒன் பதுள்,

௧. சுத்த சைவ மென்பது:—ஞானம் இரண்டு வகைப் படும். அவற்றுள் ஒன்று காமிகாதி ௨௮ ஆகமமாகிய தந்தி ரத்தின் உண்மை ஞானமாகும். ஒன்று அதனை யறிவிக்கும் மிருகேந்திராதி ௨0௭-உபாகமமாகிய தந்திரபேதமாகும். அத னின் கருத்து யதார்த்தமாகிய பதி பசு பாச மென்கிற திரி பதார்த்தங்களில், பச்=பந்தித்தல், உ=செயப்படுபொருள் விகுதி. அதனால் தன்னை அநாதியே பந்திக்கக்கூடிய பாச சம்பந்தம் பெற்றுப் பசுவென்னும் பெயருடைய அநாத ஆன் மாக்களானவை அனந்தமாகும். பச்=பந்தித்தல், அ=கரு விப்பொருள் விகுதி. அதனால் ஆன்மாவைப் பந்திக்கக்கூடிய தன்மையுடைத்தாய்ப் பாசமென்னும் பெயருடைய அநாத பாசமானது பூத முதல் நாத பரியந்தம் ௩௬ தத்துவமாகும். பா=காத்தல். தி=வினை முதற்பொருள் விகுதி. அதனால் ஆன்மாக்களைக் காக்கிறவ னென்னும் பெயரிய அநாதபதி யானது இலயம் போகம் அதிகாரமென்னு முறையில் உருத் திரன் மகேசுவரன் சதாசிவனென்றாகும். அந்தச் சதா சிவனே பதி. அப்பதிதானே தத்துவபேதமாம். அதற்குப் பஞ்ச சாதாக்கியமென்று பெயர். விவரம்: பரமான பொரு ளாகிய சிவ சாதாக்கியமும், தழற்பிழம்பான வடிவாகிய அமூர்த்தி சாதாக்கியமும், ஒரு முகமும் மூன்று கண்ணும் இரண்டு கையும் இரண்டு காலும் படிக நிறமுமாகிய மூர்த்தி

சாதாக்கியமும், நான்கு முகமும் எட்டுக் கையுமுள்ள விக்கிர கமான மஹேசுர ரூபமாகிய கர்த்திரு சாதாக்கியமும், இலிங் கமும் பீடமுமாய் பிரபஞ்சமெல்லாம் பிண்டீகரிப்பதாகிய கன்ம சாதாக்கியமுமாகும். சிவசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியத்திலும், அமூர்த்தி சாதாக்கியம் மூர்த்தி சாதாக்கி யத்திலும், மூர்த்தி சாதாக்கியங் கர்த்திரு சாதாக்கியத்திலு மாகக்கூட ஐந்து முகமும் பத்துக் கையுமாகும். அஃது கன் மத்திலேயிருக்கும் பரமாகிய ஜடாத்துவாவை அவ்வடிவா கக் கொண்டிருக்கும் சதாசிவமே கீழ் உருவமும் மேல் அரு வமுமாய் விரவிய ரூபாரூபமாகும். அந்தச் சதாசிவப் பொரு ளைத் தெய்வமென்றெண்ணி உயிர்க்கொலை, ஊன் புசிப்பு, களவு, பொய், கள், விபசாராதி மஹாபாதகங்கட்கு விலகி விதிப்படி விபூதி உருத்திராக்ஷ முதலிய உருத்திர சின்னந் தரித்து உள்ளும் புறம்பும் பூஜை புரியில் அதுவே முக்தி யென்றும்.

[சாதாக்கியம் = சதாவாகச் சிவபாதத்தை யுடையது.]

இதில் சதாசிவமே பொருளாயினும், சாயுஜ்ய நெறி யைத் தருவதற் கேதுவாகியதும் தானே சாயுஜ்யமல்லாதது மான குற்றமற்ற அர்ச்சனையாதி கிரியா மார்க்கத்தில், சரியை முற்றிற் சாலோகமும், கிரியை முற்றிற் சாமீபமும் யோகமுற்றிற் சாரூபமுமாகிய பதமுத்தியைத் தானே முத்தியாகக் கொண்டதன்றிக் கிரியைகளால் எட்டிப் பிடிக் கப்படாமற் சிவஞான முற்றி அதனால் வாய்க்கின்ற அவாங் மனோகோசரமாகிய சாயுஜ்ய மென்னும் பரமுத்தியைக் கொண்டதில்லை யென்பதாயிற்று.

உ. அசுத்த சைவமாவது:—யாவுஞ் சுத்த சைவ நெறி போலும் ஆனால் பதி நிலைமைமட்டும் பிரம விஷ்ணு ருத்திர என்ற மூன்று மொக்கு மெனக் கொண்டு நீக்கமறப் பூஜிக்க முத்தியென்றும்.

இதில் மூன்று முதலும் ஒன்றென்பதால் அம்மூவர் பதிகளில் முத்தித்தானம் பிரம்மலோகமா ? வைகுண்டமா ? ? அல்லது மூன்று தானமுமாவென்று -முண்டாவதில் அதை நன்கு விசாரிக்க ஒன்றும் நிலைபெறாததாகும். அதனாற் பதமுத்தியும் இல்லையென்றே வெளியாம்.

௩. மிச்சிர சைவமென்பது:—வேதம் அநாதி, ஆகமம் ஆதியென்றெண்ணிப் பொது நூலாகிய அவ்வேத நெறி நிலைமையாக ஆசாரம் விவகாரம் பிராயச்சித்த மென்பவைகளையும் மந்திரம் ஜெபித்தலையும் ஆகமநெறி நிலைமையாகத் தந்திர கயிங்கரியங்களையும் ஒக்கக் கொண்டு நிற்பதுவே முத்தியென்றும். [மிச்சிரம் = கலப்பு]

இதிலுங் கிரியா மார்க்கமே முடிவென்று காணப்படுதலால், பதமுத்தி பெறுவதென்பதேயன்றிப் பரமுத்திபெறுவதில்லை யென்பதாகும்.

௪. சித்தாந்த சைவ மென்பது:—சுத்தமாயையிற் றோன்றிய சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவ மென்னும் சிவதத்துவங்களைந்தில் சத்திதத்துவமொன்றுஞ் சத்திரூபம். ஏனை நான்குஞ் சிவரூபம். சுத்தா சுத்தமாயையிற் புருடதத்துவமே ஆன்மாவென்றும்.

இதில் சித்தாகிய ஞானத்தைச் சொரூபமாகவுள்ள சிவனைப் பாசங்களாகிய தத்துவங்களைச் சொரூபமாகவுள்ளவனென்றும், ஞானமும் அஞ்ஞானமுமல்லாச் சதசத்தான குணத்தைச் சொரூபமாகவுள்ள ஆன்மாவைப் பஞ்சகஞ்சுகஞான புருடதத்துவமென்றும் பொருளறியாது கூறியதாற் பாசஞானமும் பதமுத்தி யரிதென்பதுமாம்.

௫. அநாதி சைவமென்பது :—சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னும் நாலுவாக்குமே பிரம்மபேதம்.

இதன் முடிவான அறிவும், அதன் முதலாகிய ஓங்காரமுமே உண்மைப் பொருளென்றும்.

இதில் சுத்தமாயையிற் றோன்றிச் சர்வான்மாக்களுக்கு முண்டாகிய தொழிலை யெழுப்புவித்து நிற்கிற விந்து தத்துவத்தினின்று முண்டாகிறவாக்குகளாகிய பாசக் கூட்டங்களைத் தானே பொருளென மதித்ததால், இதுவுஞ்சித்தாந்த சைவப்படி பாசஞான மென்பதேயாகும். அன்றிப் புறச் சமயமாகிய சப்தப்பிரம்மவாத முடிவையும் பொருந்தும்.

௬. அவாந்தர சைவ மென்பது:—மூலாதாரந் தொட்டு நாபிவரை பொன்மயமான பிரமவொளியாகவும், அதுதொட்டுக் கண்டம்வரை கார்மயமான விஷ்ணுவொளியாகவும், அது தொட்டுப் புருவம்வரை அக்கினிமயமான ருத்திரவொளியாகவும், அதுதொட்டு உச்சிவரை தூமமயமான மகேஸ்வரவொளியாகவும், அதுதொட்டுத் துவாதசாந்தம்வரை படிகமயமான சதாசிவவொளியாகவுங் கண்டு பூஜிக்க முக்தியென்றும்.

இதில் பரமுக்தியில் ஆத்மாவுஞ் சிவனும் ஒன்றென்னும் ஐக்கியச் சொல்லை அல்லவாக்கி யோக முக்தியாகிய பதமுக்தியைத்தானே முக்தியென் றுவ்வாதுரைக்கலாயிற்று.

எ. பேத சைவமென்பது.—சூரிய மண்டலம் சந்திர மண்டலம் அக்கினிமண்டலம் சக்தி மண்டலம் வித்தியா மண்டலமென்னப்பட்ட கீழ்மண்டலங்களிற் பிரம விஷ்ணு ருத்திர மகேஸ்வர மென்னப்பட்ட உருவடிவுகளும், விந்து நாதபராபர பரமென்னப்பட்ட அருவடிவுகளும் இவ்வெட்டுக்கு நடுப்பட்டுள்ள சதாசிவமும் அந்தச் சதாசிவப் பொருளே யென்றுணர்ந்து அவருடைய ஈசானாதி ஐம்முகங்களில் நான்குமுகங்களில் ஐந்தைந்தும் பஞ்சம முகத்தில் எட்டுமாகத் தோன்றிய காமிகாதி உஅ-ஆகமங்களின் தந்திர ஞானவிதிப்படி மந்திர முதலிய ஆறத்துவாக்களிலுங் கட்டுப் பட்டிருக்கிற சஞ்சிதமாகிய புண்ணிய பாவங்களைப் போக்கத்

தக்க தீக்ஷையாலே பவித்திரனாகி அக்கினியிலே பூசைசெய்ய ஆன்மாவுஞ் சுத்தனாவன். அதுவே முக்தியென்றும்.

இதில் முக்திமார்க்கத்திற்கான ஆத்ம சுத்தியைத் தானே அரிய முக்தியென் றதிர்க்கலாயிற்று.

அ. அநுசைவ மென்பது:—உருவ மெல்லாம் அழியும். அதனால் சிவன் கொண்ட வடிவெல்லாம் அவன் வடிவன்று. வடிவங்களை யர்ச்சிக்கு முறைமைவிட்டுச் சைவசித்தாந்த முறையாய் உளத்தே யர்ச்சிப்பதே முக்தியென்றும்.

இதில் ஆன்மாக்களை யிரக்ஷிக்கும் பொருட்டுச் சிவன் கொண்டவடிவங்களை யெல்லாம் உதாசனம் பண்ணி அவ்வடிவிற்கு முதலான சுத்தசூனிய அறிவுயிரைத்தானே முதற் பொருளாகக் கருதி உட்பூஜை செய்வதை மோக்ஷமென்று கொள்வதால், அறிவுக்கு மரணமின்றென அவ்வறிவிருக்கும் உருவை வெட்டினது போலவும் அருண்மூர்த்தியா யிருந்து தனக்குபதேசித்த தேசிகரது திருவடிக்கமலங்களை வணங்காது அவரது வுயிரை வணங்குவேனென்றது போலவு முள்ள ஒவ்வா நடையை உறுதியென்பதாயிற்று. இம்மதத் துணிவு பிற்பேசப்படும் புறப்புறச்சமயமாகிய துலுக்கர் மதத்துணிபை யொக்கும்.

க. ஆதிசைவ மென்பது:—பூதமுதல் நாதபரியந்தமான ருகூ-தத்துவங்களும் தனு கரண புவன போகங்களாய்ப் பல வுலகங்களாய்த் திரண்டுள்ள குண்டைகையாகிய பீடமாகவும் அது பிந்துவடிவாகவும் அதனிடை அருவானவுயிர்கள் கோளகையாகிய லிங்கமாகவும், அது நாதவடிவாகவுமிருக்கும்; அதைத் தியானஞ் செய்வதே முக்தியென்றும்.

இதில் சக யோகத்தைத் தானே சிவஞான சாயுஜ்ய மென்று பிறழ்ந்து கொள்ளலாயிற்று.

## (உ) பாசுபதம்

அதிமார்க்க நூலிலொன்றாகும். இந்தப் பாசுபத பேதம் மூன்றனுள் ;

பாசுபத மென்பது:—பசுவாகிய வுயிர்தானே எங்கு நிறைந்த பொருளாம். அப்பொருள் எல்லாவிடத்துமுள்ள தென்றுணர்ந்து சிவனுடைய திருப்பணிகளாகிய சரியை கிரியைகளைத் தள்ளிச் சிகை உபவீதங் களைந்து, ஜடை புனைந்து, முத்தண்டுங் கரகபாலமுங் கொண்டு கௌபீன தாரியாய்த் தவம் புரிவதே முக்தியென்றும்.

இதில் பசுவானது பாசநீங்கிப் பதியோடு கூடத்தக்க சாயுஜ்ய முக்தியை விடுத்துப் புறச்சமயமாகிய மாயாவாத மார்க்கம் போல ஆன்மவாதத்தைக் கைக்கொள்வதென்பதாகும்.

கக. சூரியவாத மென்பது:—மூன்றுலகையும் விளக்குவிக்கும் மண்டலத்தையுடையனாய் மும்மூர்த்திகட்குங் கண்ணும் இடமுமாய் எல்லாவுயிர்கட்கும் விழிப்பும் ஒடுக்கமுஞ் செய்து அந்தரத்துலாவுபவனுயுள்ள சூரியனை விழிக்குள்ளும் புறம்பும் தரிசிக்க முத்தியென்றும்.

இதில் தக்ஷப்பிரஜாபதியக்கியத்தில் சிவனை யொழிந்து அவியுண்ணச் சென்ற ஞான்று வீரபத்திர தேவர் அறைந்த அறையாற் பல்லும் விழியும் உகுப்புண்ட ஜீவனுகியும் அத்திரிக்குப் புத்திரனுகியுமுள்ள சூரியனைத் தானே பரம் பொருளாய்க் கொள்வதென்பதாயிற்று.

கஉ. சந்திர வாத மென்பது:—எவ்வுயிர்க்குங் குளிர்ச்சியைத் தந்து தேவர்கட்கு மருந்தினுமரிய அமுதத்தை நல்கி வந்திப்பார்க்குத் தோன்றினவளவிற் சுகத்தையுதவி இந்திராதியர்க்கு மேலானவனுய்ச் சிவனுக்குக் கண்ணானவனு

யுள்ளான் சந்திரனே யென்றறிந்து அவனைத்தொழுது அவனமுதுண்பார்க்கு முத்தியென்றும்.

இதில் அத்திரியின் நேத்திரத்திற் றோன்றிய புத்திரனுய்த் தக்ஷப் பிரஜாபதி மகத்தில் வீரபத்திர தேவர் திருவடியாற் றுவையுண்டவனும், நாடோறுந் தேய்ந்து வளர் கலையுள்ளவனுமுள்ள சந்திரனென்னும் ஓர் ஆத்மாவையே பெரிய பொருளாய்க் கொள்வதென்பதாயிற்று.

## (௩.) வாமம்

இவ்வாம பேதம் ஒன்பதில் ;

கக. வாம தந்திரமேன்பது :—ஒன்பதுவகை யாமளத்ம பிரதானமாகிய யாமளமென்னும் நூனெறிப்படி யாவத்வடிவுஞ் சத்திவடிவே. அச்சத்தி பராசத்திமுதற் கிரியாசத்தியீருக ஆயிர பேதமாம். அகாமுதல் ஐம்பத்தொன்றும், அவற்றின் பேதமான எழுத்துக்களும், அறிவும், அறிவிப்பதும், ஐங்கிருத்தியங்களும், அருளென்பதும், ஹானுக்கு உடம்பு உயிர் அறிவாவதும் அச்சக்தியேயன்றி மற்றொன்றில்லை. அதைத் தரிசிக்க முத்தியென்றும். இந்த மார்க்கத்தைத் தானே சாக்தமத மென்றும் அதற்குரிய நூல் சாக்தேய மென்றும் அந்நூற் சக்தி தத்துவத்தில் வசிக்கும் ஓர் ஆத்மாவினுற் றுலக்கிச் செய்யபட்டதென்றுஞ் சொல்லப்படும். அல்லாமல் பஞ்ச தத்துவம் என்னும் சாங்கம் ஐந்து. அதாவது, கொலைசெய்த இறைச்சி, மீன், சாராயம், ஸ்திரீ சம்பாஷணை, புணர்ச்சியபிநயம் இவைகளைச் சாதிக்குமுண்மையால் பிசாசபதத்தைத் தரத்தக்க வழியைப் போதிக்கும் கௌளம் யாமளம் முதலிய நூல்களென்று பெயர் விளங்க மச்சேந்திர நாதராதி மானுட சித்தராற் செய்யப்

பட்டனவு முண்டு. சாற்றிய சாங்கம் ஐந்தும் சிவ சக்தி யாராதனையில் விலக்கப்பட்டன.

விளக்கிய வாமதந்திரத்தில் அக்கினியிற் சூடுபோற் சிவத்தொடு பிரிவற்றுள்ள திருவருட் சிவசக்தியைப் பிரித்து, சிவத்தையன்றிச் சக்திக்கு யாதொருசெயலு மில்லை யென்றுணரா அறியாமையைக் கைக்கொண்டும் நிற்பதென்ப. தாயிற்று. இவ்விரகசியம் விளங்கற் பாலதாய் *க—வது வியாசம் கஉ, கச, கரு, ங—வது வியாசம் ஙஉ*- இந்த வினுவுத்தரங்களிற் றுலக்கி யிருக்கிறது.

கச. மந்திரவாத மென்பது:—நமஃ, சுவாஹா, வௌஷடு, வஷடு, ஸ்வதா, பட், உம் என்று முடியும் எழுவகை மந்திரங் களும் ஒன்று கோடியாய் அவைகளே மூர்த்தியாய்ப் பிரபஞ் சத்தைப் பிரேரித்து நிற்கும். இவைதானே அறிவான பொருளென்று அதனை யறிந்து ஜெபிப்பதே முக்தியென் றும்.

இதில் யாதொரு கர்த்தாவினது நாமமாகிய மந்திரத் திற்குக் கர்த்தாவாயுள்ள கடவுளைக் கருதி முக்தி பெறுவ தொழிந்து அந்நாமத்தை மட்டும் ஜெபித்து முக்தி பெறுவ தென்னுந் தண்ணிய முடிவு பிறக்கின்றது.

கரு. இயந்திர வாதமென்பது .—எண்ணிறந்த மந்திரங் களும், எண்ணிறந்த தந்திரங்களும் எல்லாவுயிர்களும், வசிய கர்மங்களும் அணிமா முதலிய அஷ்ட களும் இயந்திரத்தாலுண்டாகும். ஆதலால், அஃதல்லது வேறு பொருள் இல்லையென்றும்.

ில் காம நெறிக்குரிய அஷ்டகர்மங்களையும் அவைகட் குரிய அஷ்ட சித்திகளையுமே ரப்படசா பிரகாசமான சிவ ஞான மோக்ஷமென மருண்டு கூறுமுடிவு தோன்றுகின்றது.

(தொடரும்)

பொது விலக்கணத்துள் 22-ம்
வி 222 வரை (இவை யெல்லாம்

-ாவது வினுத்தாள் (சைவசாத்திரம்) சிவஞானசித்தி
சம் சிவஞான சுவாமிகள் உரை; சிவஞானபாடியம் முத
லிரண்டு சூத்திரங்கள் (சமாஜப்பதிப்பு)

**சைவப்புலவர் தேர்வு:—முதல் வினுத்தாள் (சைவஇலக்கியம்)** அகத்தியர் தேவாரத்திரட்டு முழுமையும் கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் உரையுடன்; திருவாசகம் அகவல் நான்கும் திருச்சதகமும் கா. சுப்பிரமணிய பிள்ளை உரையுடன்; பெரிய புராணம் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் பொழிப்புரையுடன்; திருக்குறள் அறத்துப்பால் முழுமையும் பரிமேலழகர் உரையுடன்; சைவசமய நெறி முழுமையும் பொழிப்புரையுடன் **இரண்டாவது வினுத்தாள் (சைவசாத்திரம்)** சிவஞானபாடியம் முழுமையும்; அஷ்டப்பிரகரணம் பக்கம் 1—162 (தேவகோட்டை சிவாகமசங்கப் பதிப்பு). சைவஇளைஞர்கள் உடனே விண்ணப்பம் செய்வார்களாக.

இங்ஙனம்

"திருவருளகம்"
22-ஏ, கல்லுக்காரத் தெரு,
மயிலாப்பூர். 10-1-38

ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி

---

## சிவஞான பாடியம்

சைவ சித்தாந்த சாத்திரப் பெருங் கருவூலமாக விளங்கும் சிவஞானபாடியம், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பாக வெளி வந்துவிட்டது. இப்பதிப்பில் சிவஞான போதமூலம், சிவஞான சுவாமிகளுடைய பாடியம், வடமொழிச் சிவஞானபோத மூலம், சிவஞானபோதச் சூர்ணிக்கொத்து, மெய்கண்டார் வரலாறு, சிவஞான சுவாமிகள் வரலாறு, பாடியத்தைப்பற்றித் திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் எழுதிய ஆராய்ச்சி அணிந்துரை முதலியன அடங்கியுள்ளன. இவ்வரிய நூல் இம்முறையில் இவ்விலைக்கு எவராலும் தரப்படவில்லை. நல்ல கிளேஸ் காகிதத்தில் ருளகு+40 பக்கங்கொண்ட முழுக் கலிக்கோ பைண்டு செய்யப்பெற்ற அழகிய பதிப்பு.

**தனிப்பிரதி விலை ரூபா ஒன்று;** ரிஜிஸ்தர் தபாற்கூலி அணு ஒன்பது
**பதினொரு பிரதிகள் விலை ரூபா பத்து;**
ரயில்வே பார்சல் கூலி, தபாற் கூலி வேறு

**உடனே பிரதிகட்கு மணியார்டர் அனுப்புக.**

Registered No. 2330 SIDDHANTHAM Vol. 11 No. 8

# பெரிய புராணம்

## இரண்டாம் பதிப்பு

சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த பெரிய புராணம் நமது சமாஜத்தின் இரண்டாம் பதிப்பாக இராய வேலூரில் நடைபெற்ற சமாஜ முப்பத்திரண்டாம் ஆண்டு நிறை விழாவின் தொடக்கத்தில் வெளியிடப்பட்டது. ஏனைய பதினொரு திருமுறைகளின் டபில் கிரவுன் அளவிலேயே இவ்விரண்டாம் பதிப்பு அச்சிடப் பெற்றுள்ளது. மூலம் பைகா எழுத்திலும், முக்கிய சொற்றொடர்களும் பாடல்களும் தடித்த பைக்கா எழுத்திலு முள்ளன. மொத்தப் பாடல் எண் ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும் குறிக்கப்பட்டுள்ளது. புராண எண், பாட்டெண் முதலியன குறியீட்டுக் குதவியாகத் தரப் பட்டுள்ளன. சேக்கிழார் சுவாமிகள் வரலாறு, அரும் பொருளகராதி (விஷயக் குறிப்புகள்), திருத்தொண்டர் புராண வரலாறு, திருமுறைகண்ட புராணம், பாட்டு முதற் குறிப்பகராதி, யாப்புக் குறிப்பட்டவணை முதலியன இப் பதிப்பிலுள்ளன. இப்பதிப்பின் துணை கொண்டு பெரிய புராணத்தின் அருமை பெருமைகளையும் சேக்கிழார் திருவாக்கிலுள்ள இலக்கியச் சுவை பக்திச் சுவை முதலியவைகளையும், சேக்கிழார் உபயோகித்துள்ள சந்த வேறுபாடுகள் செய்யுள் வகைகள் முதலியவற்றையும் எளிதில் உணரலாம்.

**தனிப்பிரதி விலை ரூபா ஒன்று அணா ஆறு;**

*ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பத்து*

**ஆறு பிரதிகள் விலை ரூபா ஏழரை;**

*ரயில்வே பார்சல் கூலி முதலியன வேறு.*

உடனே முன்பண மனுப்பிப் பிரதிகளைப் பெறுக.

சைவசித்தாந்த மகா சமாஜம்,

"திருவருளகம்", 22-A, கல்லுக்காரத் தெரு,

மயிலாப்பூர், சென்னை.

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah. Edited and Published by T. V. Volaganathan for the Saiva Siddhanta Maha Samajam, at "Thiruvarulagam", 22-A, Kallukaran Street, Mylapore, Madras.